# Kalki Shopping Page

## ஆண்களுக்கு தையற்கலை வகுப்புகள்

நேரிலும் தபால் மூலமும் 2 மாத / 6 மாத பகுதிநேர/முழுநேர வகுப்புகளில் பயின்று சுயமாக பொருளீட்ட ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. ஷிப்டில் உள்ளவர்களுக்கு வசதி செய்யப்படும். செய்முறை வகுப்புகள், தமிழ், தெலுங்கு ஆங்கில மலையாள மொழிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. முற்றிலும் எளிய நவீன முறையில் நடத்தப்படும் ஒரே ஸ்தாபனம்.

நேரில் வரவும் (அ) விபர புத்தகம் பெற ரூ. 2-00 M. O. செய்க.

**வனஜ்**
**தையற் பள்ளி**
32, காந்தி இர்வின் சாலை எழும்பூர்
சென்னை-600008
(டென்னிஸ் ஸ்டேடியம் அருகில்)

(எந்த தேதியிலும் சேர்ந்துகொள்ளலாம்)




இரு பெரும் பாரம்பரியங்கள்
ஒரு தங்கமான இடத்தில் சந்திப்பு

உம்மிடி
பங்காரு செட்டி அண்ட் சன்ஸ்
போன்: 88730

ஜுவல்லரி ஷோரூம் மற்றும்
ஸ்பென்ஸர்ஸ்
769 அண்ணா சாலை,
மதராஸ்-600 002
தலைமுறை தலைமுறையாக
கணக்கிடப்படும்
ஒரு பாரம்பரியம்



VBC Showroom

CCC/VBC/28

*While others are busy talking about their TV sets, we are busy selling ours!*

**Bharat TV**

*more performance than promises.*



Available at:
**TV TRADERS**
Alwarpet,
Madras 600 018 Phone: 71238
Anna Nagar, Madras 600 040

**FREE DEMONSTRATION**

NEW
**Sumeet**
**Kitchen Machine**
400 Watts 30 Mins.Rating
230 V AC/DC



between
6-00 & 7-30 p.m.
on Friday & Saturday

**at VIVEK AGENCIES**
133, Royapettah High Road, Mylapore,
Ph: 76661, 76923:
205, Purasawalkam High Road, Madras
Ph: 662462, 663545

1195

# Kalki Shopping Page

*While others are busy talking about their TV sets, we are busy selling ours!*

**Bharat TV**

*more performance than promises.*



ACIL BT 30/79

*Available at :*

**VIVEK & CO**

Purasawalkam, Madras-600 007
Phone : 662462/663545
Mylapore, Madras 600 004
Phone : 76923/75661.




ஸ்பென்ஸரில்
ஷாப்பிங் செய்யும்போது
நல்ல முடிவுக்கு வாருங்கள்
எங்களிடம் வாருங்கள் :

—1900 முதல்

769 அண்ணா சாலை,
சென்னை-600 002
போன் : 88730




CCC/VBC/29

Beauty **with HAL*brains**

(*Hindustan Aeronautics Limited)

**Bharat TV**



*Available at:*

ACIL BT 33/79

| RAJA ENTERPRISES | PARAM AGENCIES | RAJA RADIO & ELECTRICALS |
|---|---|---|
| 228, T. H. Road, | 93/3, Peters Road, | 228, Royapettah High Road, |
| Madras-600019 | Madras-600014 | Madras-600014 |
| Phone: 553840 | Phone: 812577 / 812671 | Phone: 841533 |

# முதலாளிகளுக்கான ஜனநாயகம்!

**[ இந்திய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் திரு எம். கல்யாண சுந்தரம் நமது சில கேள்விகளுக்குப் பதிலளித்துள்ளார். நன்கு சிந்தித்துப் பதில்களை ஏற்பதும் ஏற்காததும் வாசகர்கள் உரிமை. அதில் யாரும் தலையிட முடியாது! ]**

கேள்வி: இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையேயுள்ள அடிப்படைக் கொள்கை வித்தியாசங்களாக எவற்றைக் கருதுகிறீர்கள்? இரு கட்சிகளும் ஒருங்கிணைந்து ஆளும் கட்சிக்கு எதிராக பலம் வாய்ந்த ஒரு மாற்றுக்கட்சியாக அமைவதில் உள்ள தடைகள் என்ன?

திரு கல்யாணசுந்தரம்: உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தைப் பற்றிய இருவிதமான கருத்து வேறுபாடுகளின் காரணமாகவே மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சி தோன்றியது. அந்தக் கருத்து வேறுபாடுகள் இன்னும் நீடிக்கின்றன.

இரு கட்சிகளும் கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தை எவ்வாறு இந்தியாவில் அமுல்படுத்துவது என்பதிலும், கருத்து வேறுபாடுகள் உள்ளன. இந்தக் கருத்து வேறுபாடுகள் சாதாரண வாதங்கள் மூலம் தீர்க்கப்படக் கூடியவை அல்ல. அனுபவந்தான் போதிக்க வேண்டும். இருப்பினும் தொழிற்சங்கப் பிரச்னைகளில், தொழிலாளர் வர்க்கப் போராட்டங்களில் இவ்விரண்டு கட்சிகளும் ஒன்றுசேர்ந்து ஒரு நிலை எடுத்து இயக்கம் நடத்தப்பட்டு வருகின்றது.

தொழிலாளர் நலனுக்கு எதிரான தொழிற்சங்கச் சட்டங்களையும், பூதலிங்கம் கமிட்டி அறிக்கையையும் எதிர்த்து ஒன்றுபட்டுப் போராட்டம் நடத்துகிறோம்.

தமிழ்நாட்டில் நாகை இடைத் தேர்தலில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளருக்கு மார்க்ஸீய கம்யூனிஸ்டு கட்சி ஆதரவு அளித்தது.

இரண்டு கட்சிகளும் ஒன்றுசேர்ந்து ஒரு கூட்டணி அமைப்பது சாத்தியமானது என்பதையே இந்த நிலை வெளிப்படுத்துகின்றது.

கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தைப் பற்றிய வேறுபாடுகள் நடைமுறை வேலைகளுக்குக் குறுக்கே நிற்க அவசியம் இல்லை.

இரண்டு கட்சிகளும் ஒருங்கிணைய உடனடியாக வாய்ப்புகள் இல்லை. மார்க்ஸீய கட்சித் தலைவர்கள் பேசுகின்ற பேச்சுக்களிலிருந்தும், பத்திரிகைகளில் வெளிவரும் அவர்களது கட்டுரைகளிலிருந்தும் இரு கட்சிகளும் இணைவது இப்போது சாத்தியமில்லை என்பதை வெளிப்படுத்துகின்றன.

கேள்வி: இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சோவியத் ரஷ்யாவுடனும், மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சி சைனாவுடனும் அடிப்படை உறவு நிலை வைத்துள்ளன. இந்தியத் தன்மை இல்லாத இக் கட்சிகளை மக்கள் எப்படி ஆதரிப்பது என்ற ஐயம் மக்களிடையே பரவலாகக் காணப்படுகிறதே. இதற்குத் தங்கள் பதில் என்ன?

திரு கல்யாணசுந்தரம்: இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தோன்றியது 1925-ல். அதற்குக் காரணமானவர் மூன்று பேரும் இந்தியர்கள். அவர்களில் ஒருவர் தமிழருங்கூட. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை வளர்ப்பதற்குக் கடந்த 54 வருடங்களாக பகவத் சிங்கிலிருந்து பல தேச பக்தர்கள் தூக்குமேடை ஏறக்கூடத் தயங்கியதில்லை. தொழிலாளர்கள் தூக்குமேடை ஏறவும், துப்பாக்கிக் குண்டுகளைச் சந்திக்கவும், லட்சக்கணக்கில் வெஞ்சிறையில் வாடவும் பின்வாங்கியதில்லை. இம்முறையில் வளர்ந்துள்ள இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியை, அன்னிய சித்தாந்தத்தைப் பின்பற்றும் கட்சி என்பது ஆதாரமற்றது. சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறபடி நாம் நடப்பதாகச் சொல்வதும் ஆதாரமற்றது. உலகில் தற்போது நூற்றுக்கு மேலான நாடுகளில் கம்யூனிஸ்ட் கட்சி இயங்குகிறது. இவற்றில் சோவியத் யூனியன் உட்பட 15 நாடுகளில் கம்யூனிஸ்ட் கட்சியினர் ஆட்சி நடத்துகின்றனர். அமெரிக்காவில் கியூபா நாட்டில் கம்யூனிஸ்ட் ஆட்சி நடைபெற்று வருகிறது.

## எங்கே போகிறோம்?



# மக்களுக்கான ஆட்சி அல்ல!

பொதுவாக கம்யூனிஸ்ட்டுகள், மனிதனை மனிதன் சுரண்டுவதை எதிர்த்துப் புதிய பொருளாதார அமைப்பை அதாவது, சென்ற நூற்றாண்டு வரை மனித குலம் கண்டிராத ஓர் அமைப்பை அவரவர் நாட்டில், அந்தந்த நாட்டின் கலாசாரம் பண்பாட்டிற்கு ஏற்ப அமைக்கப் போராடிக் கொண்டிருக்கின்றனர்.

எனவே இந்திய அரங்கில் எந்த அடிப்படையில் சோஷலிச சமுதாயத்தை உருவாக்குவது என்பதைத் தீர்மானிப்பது இந்திய கம்யூனிஸ்ட் கட்சிதானேயொழிய வேறு வெளிநாட்டுக் கம்யூனிஸ்ட்டுகள் அல்ல. பொது நோக்கின் காரணமாய் வெளிநாட்டு கம்யூனிஸ்ட் கட்சிகளுடன் தோழமை உறவு கொண்டிருப்பினும், கம்யூனிஸ்ட் கட்சிகள், அந்தந்த நாட்டில் சுதந்திரமாக இயங்கக் கூடியவை. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி, சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியுடன் அடிப்படை உறவு கொண்டது என்றுகூறுவது, இந்திய பெரு முதலாளிகளும், பிறநாட்டு பெரு முதலாளிகளும் சேர்ந்து கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராகச் செய்யக்கூடிய பொய்யான பிரசாரமாகும்.

இதைக் கண்டு மக்கள் ஏமாறக் கூடாது.

**கேள்வி:** இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் ஜனதா கட்சியும் அடிப்படைக் கொள்கை அளவில் எதிரிடையானவை. நாகைத் தேர்தலில் இவை இரண்டும் இணைந்து செயல்பட்டதை எவ்வாறு நியாயப்படுத்துகிறீர்கள்?

*கல்யாணசுந்தரம்:* அன்று தி.மு.க. ஆட்சியின் யதேச்சாதிகார தொழிலாளர் நல விரோதக் கொள்கைகளுக்கு எதிராக இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர் நின்ற போது அதற்கு ஜனதா கட்சியினர் ஆதரவு அளிக்க முன்வந்தனர். அவர்கள் கொள்கையை அவர்கள் விட்டு விடவில்லை. அம்மாதிரி எங்கள் கொள்கைகளையும் நாங்கள் விட்டு விடவில்லை.

அடிக்கடி பூகம்பம் ஏற்படக்கூடிய மனிலா, ஸான்ஃபிரான்ஸிஸ்கோ போன்ற நகரங்களில் கட்டிடங்களுக்குப் பழுது ஏற்படாமலிருக்கப் புதிய உத்தி ஒன்றைக் கையாளுகிறார்கள். அதாவது புதிதாகக் கட்டப்படும் கட்டடங்களுக்குக் கீழே ரப்பர் ஸ்பிரிங்குகளைப் பொருத்தப் போகிறார்கள்!

—நியூ ஸைன்டிஸ்ட்
—ஆர்னம்.

**கேள்வி:** தி. மு. க. மீது ஊழல் குற்றச்சாட்டுகளைச் சாட்டி அதனைப் பதவியிலிருந்து இறக்குவதில் உங்கள் கட்சியும் பெரும் பங்கு வகித்தது. தற்போது தி.மு.க.வுடன் உங்கள் கட்சி கூட்டணி சேர்ந்து கொண்டு அ. தி. மு. க.வை எதிர்க்கிறதே! அது எவ்விதத்தில் சரியாகும்?

*கல்யாணசுந்தரம்:* இந்திய நாட்டின் அரசியலில் தீவிரமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. பழைய நிலைமைகளையே வைத்துக் கொண்டு மாறியுள்ள சூழ்நிலையில் பிரச்னைகளை ஆராயக் கூடாது. மதவெறிக் கட்சிகளும், ஜாதி வெறிக் கட்சிகளும் இப்பொழுது ஆதிக்கம் செலுத்த முன்வந்துள்ளன. தமிழ் நாட்டில் நடக்கின்ற ஆட்சி பாஸிஸ முறையில் நடக்கின்றது. இத்தகைய பேரபாயத்தினின்று மக்கள் இயக்கத்தைக் காப்பாற்ற, டி. ஐ. சைக்கிள் போராட்டம் முதல் இன்றைய பஞ்சாலைத் தொழிலாளர் பிரச்னைவரை தி.மு.க.வும் மற்றைய எதிர்க் கட்சிகளும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியோடு சேர்ந்து போராடுகின்றன. அன்று தி.மு.க. ஆட்சியை எதிர்த்துப் போராடிய நாங்கள் தொழிலாளர் விவசாயிகள் நலனுக்காகவே அவ்வாறு செயல்பட்டோம். இன்று தி.மு.க. வோடு சேர்ந்து நின்று போராடுவதும் அதே தொழிலாளர் விவசாயிகள் நலனுக்காகவே. தி.மு.க. பிரதான எதிர்க்கட்சி என்பதை மறந்து விடக் கூடாது. ஜனநாயக அமைப்பில் எதிர்க்கட்சியைப் பயன்படுத்த வேண்டியது அவசியமாகும். ஆளுங்கட்சி, எதிர்க்கட்சி ஆகிய இரண்டையும் ஒரே சமயத்தில் எதிர்ப்பது என்பது அரசியலில் விவேகமல்ல.

**கேள்வி:** சமீப காலத்தில் தோன்றிய கட்சிகள் விரைவில் வளர்ச்சி அடைந்து ஆட்சியைக் கைப்பற்றும் நிலைக்கு உயர்ந்துள்ளபோது, ஐம்பத்து மூன்று ஆண்டுகளுக்கு மேலாகச் செயல்பட்டு வரும் தங்களது கட்சியால் ஆட்சி அமைக்க முடியவில்லையே? இதற்குக் காரணம் என்னவென்று கூற விரும்புகிறீர்கள்?

*கல்யாணசுந்தரம்:* கம்யூனிஸ்ட் கட்சியின் லட்சியம் எப்படியாவது ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்பதல்ல. ஏற்றத் தாழ்வுகள் உள்ள சமுதாய அமைப்பையும் பொருளாதார அமைப்பையும் மாற்றிச் சுரண்டல், வறுமை ஒழித்து ஒரு புதிய சோஷலிச சமுதாயத்தை அமைக்கப் பாடுபடுவதே எங்கள் நோக்கம். ஒரு புது யுகத்தை உருவாக்கப் போராடுவது கடினமான வேலையாகும். நாங்கள் பதவிக்கு இப்போது வராமல் இருந்தாலும் இந்த மண்ணில் நாங்கள் போட்ட வித்து வளர்ந்து கொண்டிருக்கிறது. சோஷலிசத்தைப் பற்றிப் பேசாத கட்சிகள் இப்போது இல்லை. இது எவ்வாறு சாத்தியமாயிற்று? இக்கட்சிகள் சோஷலிசத்தைப் பற்றிப் பேசித்தான் மக்கள் முன்னே செல்ல முடிகிறது. பல்வேறு கட்சிகளுக்குள்ளேயும்சோஷலிசக் கருத்துக்கள் பரவியுள்ளன என்பதோடு இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்திலும் சோஷலிசம் என்கிற வார்த்தை இடம் பெற்றுள்ளது. இது யாரால் ஏற்பட்ட மாறுதல்? கம்யூனிஸ்ட் கட்சி தோன்றி அது நடத்திய வர்க்கப் போராட்டங்களினால்தான் இம்



''ஒன்னுமே நடக்கலே! வேலி வேலே கை காண்பிப்படி கிளார்க்கிடம் பேசிக்கிட்டிருந்தேன், அவ்வளவுதான்!''

---

மாற்றம் இந்திய அரசியலில் ஏற்பட்டுள்ளது. இந்நிலை வளர்ந்து தீவிரம் அடைந்து வருகின்றது. இவ்வளர்ச்சி உரிய காலத்தில் கம்யூனிஸ்ட் கட்சியும் மற்ற ஒத்துப்போகும் கட்சிகளும் சேர்ந்து ஆட்சி அமைக்கும் என்பதைத் தெளிவாக்குகிறது.

தொழிலாளர், விவசாயிகள் மட்டுமின்றி, போலீஸ் சி.ஆர்.பி. ஆகியோரும் போராட்டங்களில் ஈடுபடத் தொடங்கி விட்டனர். கம்யூனிஸ்ட் கட்சி கூறுகின்றபடி நமது இந்திய பொருளாதார, சமுதாய அமைப்பை அடிப்படையாகவே மாற்றிவிட வேண்டிய காலம் அண்மையிலேயே இருக்கின்றது என்பதைத்தான் இந்நிகழ்ச்சிகள் தெளிவாக்குகின்றன.

மேலும் கம்யூனிஸ்ட் கட்சி தனியாக ஆட்சியைக் கைப்பற்ற வேண்டும் என்று எண்ணவில்லை. மற்றைய இடதுசாரி கட்சிகள் ஜனநாயகக் கட்சிகளுடன் சேர்ந்து குறைந்தபட்ச திட்டத்தின் அடிப்படையில் கூட்டணி அமைத்து, ஆட்சியில் அமர்ந்து இடைக்காலத் திட்டங்கள் மூலம் நாட்டு மக்களுக்குச் சேவை செய்யத் திட்டம் கொண்டுள்ளது. அத்தகைய காலம் வேகமாக நெருங்கிக் கொண்டிருக்கிறது!

புதிய கட்சிகள் வார்த்தை ஜாலங்கள் மூலம் பழைய கள்ளைப் புதிய மொந்தையில் போட்டு விளம்பரம் செய்து வேகமாகப் பதவிக்கு வந்தாலும் அத்தகைய கட்சிகளால் தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியவில்லை. நிலையான ஆட்சியை அமைத்த வரலாறே கிடையாது. எவ்வளவு வேகமாகப் பதவிக்கு வருகிறார்களோ அதைவிட வேகமாகப் பதவியிலிருந்து அவர்கள் தள்ளப்படுகிறார்கள்.

ஆகவே கம்யூனிஸ்ட் கட்சி வேகமாகப் பதவிக்கு வரவில்லையே என்ற வருத்தம் எங்களுக்கில்லை. மாறாக வரலாறு படைப்பவர்களாக, மக்களின் புரட்சி சக்தியை மக்களைக் கொண்டே ஒன்று திரட்டப் பாடுபடுகிறவர்களாக இருந்து வருகிறோம்.

கேள்வி: திருமதி இந்திரா காந்தி தலைமையிலான காங்கிரஸ் ஆட்சிக்கும், தற்போதைய ஜனதா கட்சி ஆட்சிக்கும் என்ன வித்தியாசம் உள்ளதாகக் கருதுகிறீர்கள்?

கல்யாணசுந்தரம்: இந்திரா காந்தி ஆட்சியோ, ஜனதா கட்சி ஆட்சியோ, எதுவானாலும் சரி இந்த நாட்டில் ஆதிக்கம் செலுத்துபவர்கள் பெரு முதலாளிகளும், கறுப்புப்பணக்குபேரர்களும்தான் என்பது தெளிவாகிறது. அரசும், சட்டமும், ஆட்சி அதிகாரங்களும் சுரண்டுகிற கூட்டத்தைப் பாதுகாக்கவும், உழைக்கின்ற மக்களை ஒடுக்கவுமே பயன்படுத்தப்படுகின்றன என்பதைத் தற்போதைய நிலை நன்றாக எடுத்துக் காட்டுகின்றது. முதலாளிகளுக்கான ஜனநாயகமே தவிர மக்களுக்கான ஆட்சி அல்ல.

பேட்டி : நாயகன்
புகைப்படம் : மன்னை மூர்த்தி

---

ஜேம்ஸ்பாண்ட் - பெயரைச் சொன்னதுமே ஒரு கிளுகிளுப்பு. இந்தப் படமோ ஒரே மெய்சிலிர்ப்பு! சாகசப் படங்களுக்குத் தேவைப்படும் எல்லா அம்சங்களும் இதில் உள்ளன. செல்வச் செழிப்பு, சொகுசு சாதனங்கள், நவீன விஞ்ஞான அமைப்புகள், அலங்கார உடை அணிந்து படுக்கையறையில் காணப்படும் கவர்ச்சிக் கன்னிகள் - இத்தனையும் இப்படத்தில் மொத்தமாக இருக்கின்றன.

வேகம் நிறைந்த துணிச்சலுடன் துப்பறியும் நிபுணர் ஜேம்ஸ்பாண்டின் (ரோசர் மூர்) சாகசங்கள் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு காட்சியும் திகிலூட்டும் சம்பவம் அல்லது சதியாலோசனைத் திட்டம் அல்லது கோரக் கொலை அல்லது கிளுகிளு காதல்! ''சாகடி அல்லது செத்து மடி'' என்ற பாணியில் கதாநாயகனும் வில்லனும் பயங்கரமாக மோதிக் கொள்கின்றனர். டி.எம்.ஆர்.

## ஒரு பளபளப்பான படம்

**MAN WITH THE GOLDEN GUN**





## தமிழகம் கண்ட தனிப்பெருந் தலைவர்கள் காட்டிய வழியில் நடந்து, இன்னல்கள்—எதிர்ப்புக் களுக்கிடையே— "அண்ணாவின் அரசு" இரண்டு ஆண்டுகளில் நிறைவேற்றிய பணிகளில் சில.

### கல்வியில் மேம்பாடு

- பேரறிஞர் அண்ணா தொழில் நுட்பப் பல்கலைக் கழகம்.
- தமிழ்க் கலை, நாகரீகம் வளர்க்க தமிழ் பண்பாட்டு மையம்.
- கிராமங்களில் கல்லூரி கல்வி பெற மேல்நிலைக் கல்வித் திட்டம்.
- கல்லூரி ஆசிரியர்களுக்கு 1.4.74 முதல் புதிய சம்பள விகிதம் அமுல்.
- மொத்த வரவு செலவுத் திட்டத்தில் கால் பகுதி கல்விக்குச் செலவு செய்யும் ஒரே அரசு.
- வயதான தமிழ் அறிஞர்களுக்கு மாதம் ரூ. 250/- உதவித் தொகை.
- ஆண்டுதோறும் சிறந்த கவிஞருக்கு பாரதிதாசன் விருது ரூ. 10,000. சிறந்த எழுத்தாளருக்கு திரு.வி.க. விருது ரூ. 10,000.

### வேளாண்மை வளர்ச்சி

- ரூ. 25 கோடி செலவில் பாசனத் திட்டங்கள்.
- கூடுதலாக 32,500 ஏக்கருக்குப் பாசன வசதி.
- 11 லட்சம் டன் கூடுதல் அரிசி உற்பத்தி.

### விவசாயிகளுக்குச் சலுகைகள்

- விவசாயிகளின் பிரச்சினைகளைத் தீர்க்க உயர்மட்டக் குழு.
- சென்ற ஆண்டு பத்து கோடி ரூபாய் மின் கட்டண சலுகைகள்.
- இந்த ஆண்டு மேலும் ரூ. 40 கோடி கடன் வட்டி சலுகைகள்.
- கட்டாய லெவி முறை நீக்கம். சோதனைச் சாவடிகள் நீக்கம்.
- விவசாயத் தொழிலாளருக்கு கூலி உயர்வு அளிக்க சிறப்புக் குழு.

### நலம் கொழிக்கும் கிராமம்

- கிராமப்புறங்களில் 14 ஆயிரம் பலநோக்கு நியாய விலைக் கடைகள்.
- 2350 கிராமங்களில் 10 லட்சம் மக்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர்.
- புதிதாக 1325 மைல நீள சாலைகள்.
- 920 கிராமங்களுக்கும் புதிதாகப் பேருந்து வசதிகள்
- சிறு கிராமங்களை இணைக்க மினி பஸ்கள்.
- 1000 பேர் கொண்ட ஒரு கிராமத்துக்கு மினி ஹெல்த் சென்டர், நடமாடும் மருத்துவக் குழுக்கள்.
- பட்டுத் தொழில் மூலம் கிராமங்களில் ஒரு இலட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு.

### கைத்தறி கதர் வளர்ச்சி

- கைத்தறி நெசவாளர்களுக்கு சட்டப்படி வேலை உத்தரவாதம் —குறைந்தபட்ச ஊதியம்.
- கோ-ஆப்டெக்ஸ் நிறுவனத்தில் கைத்தறித் துணி கூடுதல் விற்பனை, 12 கோடி ரூபாய்.
- கதர்த் துணி விற்பனை ரூ. 2½ கோடி அதிகரிப்பு.

### காடு—கனி வளம்

- காடு வளர்ப்புக்கு 240 லட்ச ரூபாய் திட்டங்கள்.
- கன்னியாகுமரி மாவட்டத்தில் கட்டி ரப்பர் தொழிற்சாலை.
- ஒரு கோடி ரூபாய் மூலதனத்துடன் தமிழ்நாடு கனிப்பொருள் நிறுவனம்.

### மின் வளர்ச்சி

- பழைய மின் திட்டங்கள் விரிவு படுத்தப்பட்டன— புது மின் திட்டங்கள் தொடங்கப்பட்டன. 150 கோடி யூனிட் கூடுதல் மின்சக்தி உற்பத்தி.
- 83,000 பம்ப் செட்டுகளுக்கு மின் இணைப்பு.

### மருத்துவ வசதி

- சிறுநீர், மூளை, மாரடைப்பு போன்ற ஆபத்தான நோய்களுக்கான விசேஷ சிகிச்சைகள் கோவை, மதுரை போன்ற நகரங்களில் உள்ள அரசு மருத்துவமனைக்கு விரிவு படுத்தப்பட்டுள்ளன.

### அரிசன நலன்

- அரிசன நலத்துறை தனித் துறையாக ஆக்கப் பட்டது.
- மேல்படிப்புக்கும் உபகாரச் சம்பளம் பெறவும் அரிசன-பழங்குடியானவர்களின் பெற்றோர்களது வருமான வரம்பு நீக்கப்பட்டது.

### மீனவர்கள்

- மீன் பிடிக்கும்போது மீனவர்கள் இறந்துவிட்டால் உதவி நிதி ரூ. 1000 லிருந்து 5000 ஆக அதிகரிப்பு.
- கிணறு தோண்டுவோர் - மரம் ஏறுவோர் - சாக்கடை சுத்தம் செய்வோருக்கும் இதே உதவி.

### அரசு ஊழியர்களுக்குச் சலுகைகள்

- 37 கோடி ரூபாய்க்கு ஊதிய உயர்வு.
- பதவிக் காலம் 55 லிருந்து 58 வயதாக உயர்வு.
- குடும்ப ஓய்வு ஊதியம் ரூ. 50 லிருந்து ரூ. 100 ஆக உயர்வு.
- பிள்ளைகள் உயர்கல்விக்கு வட்டியில்லாத கடன்.
- பேருந்துக் கழகத் தொழிலாளர்களுக்கு ரூ. 5 கோடிக்கு ஊதிய உயர்வு – பிற சலுகைகள்.

### விழாக்கள் - விருதுகள்

- மறைந்த தேசத் தலைவர்களுக்கு கட்சி வேறுபாடின்றி அரசு விழா - இராஜாஜி, பெரியார் நூற்றாண்டு விழாக்கள்.
- சிறந்த திரைப்படங்களுக்கு உதவி நிதி – கலைஞர்களுக்கு விருதுகள்.
- கேளிக்கை வரி விதிப்பில் புதிய சலுகைகள்.
- பத்திரிகையாளர் உதவி நிதித் திட்டம்.
- குமரி முனையில் வள்ளுவருக்கு உருவச் சிலை - நினைவாலயம் அமைப்பு.

### வீட்டு வசதி

- குறைந்த வருவாய் பெறுவோருக்கு ரூ. 25 கோடியில் வீடுகள் கட்டித் தர திட்டம்.
- கிராம மக்கள் பயன்பெற ரூ. 40 கோடி செலவில் ஒரு இலட்சம் வீடுகள் 5 ஆண்டுகளில் கட்ட திட்டம்.
- வீடு கட்ட வட்டியில்லாக் கடன், சுலபமான வட்டி விகித முறை, சலுகைத் தொகை.
- வீடுகள் விரைந்து கட்ட செங்கல் சூளை, செல்கிரீட் தொழிற்சாலை, மொசைக் யூனிட், மரவேலைப் பட்டறை ஆகியவற்றை வீட்டு வசதி வாரியமே அமைத்துள்ளது.

### துயர் துடைக்க

- வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்காக 50 கிலோ அரிசி வீதம் 2,10,800 பேருக்கு அரிசி வழங்கப்பட்டது.
- மதுவிலக்குச் சட்டம் கடுமையாக்கப்பட்டது.

ஏழைகளின் தோழனாக என்றைக்கும் இருக்கும் இந்த அரசு



- சமுதாய நீதி - தூய்மையான நிர்வாகம் - மதுவிலக்கு.
- தாழ்த்தப்பட்ட - பிற்படுத்தப்பட்ட மக்களின் முன்னேற்றம்.
- தொழில் வளர்ச்சி - தொழிலாளர் நலன் - தொழில் அமைதி.
- தமிழ் மொழி வளர்ச்சி - கல்வியில் முன்னேற்றம்.
- கிராமங்களுக்கு வசதிகள் - வேளாண்மை வளர்ச்சி - விவசாயிகளுக்குப் பாதுகாப்பு.

இந்த திட்டங்களை அமைதியான வழியில் நிறைவேற்றுவதே

**''அண்ணாவின் அரசு''**

ஏற்றுள்ள இலட்சியம்.

இயக்குநர்
செய்தி, மக்கள் தொடர்புத்துறை
தமிழ்நாடு அரசு

ELEGANT


மக்களவையில்
பெரும்பான்மை


அகாலி
இ.காங்கிரஸ்


நான் யாருக்கு
மண்டி போடறதுன்னு
புரியலையே?
காங்கிரஸ்


இன்று
ராஜ் நாராயண்
ஜீ.. ஜெய்..ய்
ராஜ் நாராயண் ஜீ..
ஜெய்..ய்


நாளை
சௌத்ரி சாஹப் ஜீ..
ஜெய்..ய்!
சரண் சிங் ஜீ.. ஜீ..
ஜெய்..ய்!


ஜனதாவுக்கு
ஆதரவு
இ.காங்கிரசுக்கு
ஆதரவு

கலைக



1979 ஜூலை 22

சித்தார்த்தி ஆடி 6

மலர்: 37 இதழ்: 51



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# ஆளுமா, கவிழுமா?

'ஸ்கைலாப் இங்கு விழுமா, விழாதா?' என்ற கேள்விக்குறி பெரிதாக நின்றது. அப் பிரச்னை தீர்ந்த கையோடு 'ஜனதா ஆளுமா, கவிழுமா?' என்ற பிரச்னை மலைபோல் மக்கள் முன் நிற்கிறது. ஜனதா கவிழ்கிறதோ இல்லையோ, எல்லாரும் சேர்ந்து மக்களைத் தலைகவிழச் செய்துவிட்டனர்! 'ஐயோ! இப்படிப்பட்ட தலைவர்கள் வந்து வாய்த்தார்களே' என்று பாரதப் பிரஜை வெட்கித் தலைகுனிகிறான்.

'கிருபளானியும் ஜெயப்பிரகாசரும் சொன்னபடி கேட்கிறோம்' என்று வாக்குறுதி தந்தவர். தேசாயைத் தலைவராக ஏற்பதாகக் கூறினர். சொன்ன சொல் காற்றிலே கலக்கு முன் அதனை மறந்து பதவிப் போராட்டம் நடத்தினர். ஒருவரை யொருவர் காலைவாரி விடுவதிலேயே கண்ணாய் இருந்தனர். தேசம் எப்படிப் போனால் என்ன? 'நான் பெரியவனா நீயா?' என்பதே முக்கியமாகிவிட்டது.

காமெடி பாகத்தில் நடித்து வந்த ராஜ்நாராயண் வில்லன் ரோலுக்குத் தாவினார். ஜனதாவை உடைக்க ஆரம்பித்து வெற்றியும் கண்டு வருகிறார். உடனேயே மற்ற எதிர்க்கட்சிகளும் சேர்ந்து கொண்டு இன்று நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வந்தாகி விட்டது. ஆனால் ஆட்சியிடம் மக்கள் நம்பிக்கை இழந்து நீண்ட காலமாகிவிட்டது. அதிலும் சமீபத்தில், கட்டாயச் சேமிப்பாகப் பெறப்பட்ட தொகை இன்னும் ஓராண்டு காலத்துக்குத் திருப்பித் தரப்பட மாட்டாது என்று அறிவித்தபோது மக்களுக்கு ஆட்சியிடம் கொஞ்சநஞ்சமிருந்த நம்பிக்கையும் போய்விட்டது.

புதிய வரிகள் மூலம் 665 கோடி வசூலித்த பிறகும் 1355 கோடி பட்ஜெட்டில் துண்டு விழும்படி செய்த புண்ணியவான் மக்களிடமிருந்து கட்டாயமாகப் பெறப்பட்ட 425 கோடியை இப்போதைக்குத் திருப்பித் தர முடியாது என்று கூறிப் பணவீக்கத்தைத் தவிர்க்கப் போகிறாராம்! யாருக்குக் காது குத்துகிறார்கள்? கூடுதல் வட்டியுடன் அடுத்த ஆண்டு திருப்பித் தரப்படும் போது பணவீக்கம் படுத்து விடவா போகிறது?

உற்பத்திக்கு உதவாத அரசாங்கச் செலவினங்களையும் இட்ட இனங்களையும் குறைத்து, வரி விதிப்பைச் சீராக்கி, சேமிப்பு பெருகச் செய்து, பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தத் தெரியாதவர்கள் மாதச் சம்பளம் வாங்கும் நடுத்தர வர்க்கத்தினரை மறுபடியும் மறுபடியும் வதைக்க மட்டும் தயங்குவதில்லை.

இந்த அமைச்சரவையிலேயே கட்டுப்பாட்டுடன் பெருமளவு புத்திசாலித்தனமாகப் பேசி நடந்து கொண்டு வருபவர் மொரார்ஜி தேசாய்தான். அதையடுத்துத் திறமை மிக்கவர் வாஜ்பாயும் வேறு சிலரும்தான். மற்றவர்கள் எல்லாம் நேற்று ஒன்று சொல்வதும் இன்று நேர்மாறாக நடப்பதுமாய்த் தங்கள் தங்கள் துறைகளை நிர்வகிக்கத் திறமையற்றவர்கள் என்று நிரூபித்து வருகிறார்கள். தங்களது திறமைக் குறைவை மறைப்பதற்காகத் தங்களோடு சேர்ந்து கட்சியும் உடைந்து போகட்டும் என்ற நோக்கில் செயல்பட்டு வருகிறார்கள். ஆர்.எஸ்.எஸ். என்று பூச்சாண்டி காட்டிப் பயமுறுத்திக் கட்சியில் பிளவுகளைத் தோற்றுவித்து வருகிறார்கள். புன்னைவனத்து ஆண்டு குழந்தையாக, தவம் செய்து பெற்ற சுதந்திர ஜனநாயகத் தோண்டியைக் கூத்தாடிக் கூத்தாடி போட்டு உடைத்து வருகிறார்கள்.

''இந்தத் தேசத்தைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்'' என்கிறார் சவான். சுயநலவாதிகளான தலைவர்கள் மலிந்தால் கடவுளால்கூட நாட்டைக் காக்க முடியாது. வேறு யாரையாவது அழைக்க வேண்டி வரும்!

தேர்தல் முறையையே மாற்றியமைத்து அமெரிக்கா போல் ஒரு ஜனாதிபதியை மக்களே நேரடியாகத் தேர்ந்தெடுக்க வழிவகுப்பது பற்றித் தீவிரமாகச் சிந்திக்கவேண்டிய தருணம் வந்து விட்டது.

---

இந்த இதழ் அச்சுக்குப் போகும்போது அ.இ.அ.தி.மு.க. நாடாளுமன்றத்தில் ஜனதாவை ஆதரித்து வோட்டளிக்கும் என்று செய்தி கிடைத்துள்ளது. துணிந்து சரியான முடிவெடுத்த தமிழக முதல்வரை வாழ்த்துகிறோம்.

# பின் தங்கிய வகுப்பினருக்கு ஒரு முற்போக்குத் திட்டம்!

**சா**தி வித்தியாசங்கள் ஏதும் பாராட்டாத, சிலருக்கு மட்டும் சலுகை என்ற நிலையே இல்லாத, ஆரோக்கியமான போட்டா போட்டியுடன் கூடிய ஒரு லட்சிய அமைப்பு நோக்கித்தான் நாம் முன்னேற வேண்டும்.

ஆனால் அந்த லட்சியத்தை அடைய இன்னும் காலம் வரவில்லை. பின்தங்கிய வகுப்பினருக்குக் கல்வி, உத்யோக வாய்ப்பு ஆகியவற்றில் சலுகைகள் அளிக்கப்பட்டு வருகின்றன. இச் சலுகைகள் எவ்வளவு காலம் நீடிக்க வேண்டும்? பின்தங்கிய வகுப்பினர் என்று கருதப்படுகிறவர்கள், 'இனி அவ்விதம் கருதப்பட நாங்கள் விரும்பவில்லை, எங்களுக்கென்று தனிச் சலுகைகள் தேவையில்லை' என்று தாங்களாகவே கூற முன்வரும் வரை சலுகைகள் நீடிப்பதுதான் நல்லது. ஆண்டாண்டு காலமாகச் சமூக ரீதியிலும் கல்வி ரீதியிலும் பின்தங்கிய வகுப்பினர், முன்னேறி சமத்துவம் பெற இன்னும் பல காலம் ஆகும். அப்படிச் சமத்துவ நிலை அடைந்து விட்டால் சலுகைகள் பெறுவதைத் தன்மானத்துக்கு இழுக்காக அவர்களே கருதத் தொடங்கி விடுவார்கள்.

தற்போது தமிழக அரசு பின்தங்கிய வகுப்பினருக்குக் காட்டப்படும் சலுகை, வருவாய் அடிப்படையிலும் இருக்கும் என்று செய்துள்ள முடிவு வரவேற்கத்தக்கது. ஒரு வரம்புக்கு அதிகமாக வருவாய் உள்ளோருக்கு அவர்கள் பின்தங்கிய வகுப்பினராயினும் சலுகைகள் கிடைக்காது. இந்நாள் வரை வருவாய் அம்சம் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படாததால் பல விந்தைகள் நிகழ்ந்தன. உண்மையிலேயே உதவி தேவைப்பட்டவர்களுக்கு அது கிடைக்கவில்லை. வசதி, செல்வாக்கு உள்ளவர்களுக்கு மேலும் வசதி, செல்வாக்கு பெருகின.

இனி இதற்கு ஒரு முடிவு ஏற்படும். சலுகைகள் பெறுவதற்காகவே தங்களைப் பின்தங்கிய வகுப்பினர் என்று சொல்லிக்கொள்ள விழைபவர் எண்ணிக்கை குறையும்.

எம். ஜி. ஆர். அரசு எதைச் செய்தாலும் எதிர்க்க நினைப்பவர்கள் இப் புதிய விதிமுறையையும் எதிர்ப்பார்கள். வசதி படைத்த சிலர் மேலும் வசதி பெற முடியவில்லையே என்ற ஆதங்கத்தில் பக்கத் தாளம் போடுவார்கள். ஆனால் உண்மையிலேயே உதவி தேவைப்பட்டு அது கிடைக்காமல் மனம் குமைகிற பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த பலர் மனதார முதல்வரை வாழ்த்துவார்கள்.

பிற்பட்ட வகுப்பினருக்குக் காட்டப்படும் சலுகைகளில் கை வைக்காமலேயே, முன்னேற்ற மடைந்த வகுப்பினர் என்று கருதப்படுவோரிடையே பொருளாதார ரீதியில் மிகவும் பின்தங்கி யிருப்பவர்களையும் சற்றுக் கவனிப்பது நல்லது. கர்நாடக அரசு இதற்கு வழி காண்பித்துள்ளது. பிற்பட்ட, முற்பட்ட வகுப்பு என்றெல்லாம் பாராமல், பொருளாதார ரீதியில் பின்தங்கியுள்ளவர்களுக்கு ஒதுக்கப்படும் ஸ்தானங்களை ஐந்திலிருந்து பதினைந்து சதமாக உயர்த்தியுள்ளது. மற்ற மாநிலங்களும் பின்பற்றக்கூடிய முன் உதாரணம்.

'தர்மசங்கடம்' — தம்பு!




கடல் ராணி
சாண்டில்யன்
கல்கி
ஆகஸ்ட் 5
ஆண்டு மலரில்
ஆரம்பம்

# கல்கி ஆகஸ்டு 5 ஆண்டு மலர்

112 பக்கங்கள் 75 காசு

## செம்பியன்

எழுதும்

முழு நீள நாவல்

## பில்லா -ரங்கா

அமரர்

**கல்கி**

நினைவு சிறுகதைப் போட்டி

ரூ 1000/=

முதல்பரிசு

° கதை

## வாசகர்களுக்கு அதிர்ஷ்டப் பரிசுத் திட்டம்

- முதல் பரிசு:
  **பிரஸ்டீஜ் பிரஷர் குக்கர்**
- இரண்டாம் பரிசு:
  **VIP பிரீப்கேஸ்**
- மூன்றாம் பரிசு:
  **அலாரம் கடிகாரம்**

ஆறுதல் பரிசுகளாக
இருநூறு கல்கி தீபாவளி மலர்கள்.

விவரங்களுக்கு:
கல்கி ஆகஸ்டு 5
ஆண்டு மலர் காண்க.



# நான் கண்ட ரஷ்யா



**அகிலன்** எழுதும்

பயணக் கட்டுரை

சுஜாதா

எழுதும்

பரபரப்பான

தொடர் கதை

5·8·79 கல்கி

ஆண்டு மலரில்

ஆரம்பம்

# வைரங்கள்

# வட்டமேஜை



சென்னை அண்ணாசாலையில் ''காவேரி'' என்ற பெயரில் கர்நாடக கைவினைப் பொருள்களின் காட்சி சாலை திறக்கப்பட்டுள்ளது. அதிலே விற்பனைக்குள்ள பல கலைப் பொருட்களில் ஒரு வட்டமேஜை.

● ''ஓர் ஆசிரியர் ராஜினாமா செய்கிறார்'' என்ற கதை, ஆசிரியர் என்ற முறையில் என் உள்ளத்தை மிகவும் நெகிழச் செய்து விட்டது. இக்காலத்து லட்சிய ஆசிரியரை எவ்வளவு அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டார்!

பாண்டிச்சேரி கல்வே எஸ். சதாசிவம்

● திரு நந்தினி நாராயணன் எழுதியுள்ள ''ஓர் ஆசிரியர் ராஜினாமா செய்கிறார்...'' சிறுகதையை, 'நாட்டில் உள்ள அத்தனை மாணவர்களும் ஒரு முறை கட்டாயம் படிக்க வேண்டும்!' என்று சட்டம் பிறப்பிக்க வேண்டும் போல் ஓர் உத்வேகம் கதையைப் படித்து முடித்ததும் ஜனித்தது.

திருப்பத்தூர் ஜி. தனியன்

● திரு. நந்தினி நாராயணன் எழுதிய — ஓர் ஆசிரியர் ராஜினாமா செய்கிறார் — சிறுகதை— ஆசிரியர் சமூகத்திற்கே ஒரு மாக கற்பிக்கும் கதை! நம்முடைய தோற்றம் — பழகும் முறை — போதிக்கும் திறமை — நிர்வாக சக்தி — போன்றவற்றில்தான் உபாத்தியாயர்களின் வெற்றியே அடங்கியுள்ளது!

கதையில் வரும் முருகையா — ஒரு கோழை! அவரால் சலூன் வைத்துக்கூட நடத்த முடியாது! அது ஒன்றும் கஷ்டமல்ல!

பாதூர் ஜ. எஸ். ரங்கநாதன் பி.ஏ.பி.டி.

● ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அனுக்ரஹத்துடன் நிகழும் 14—8—79 வரும் கோகுலாஷ்டமியை முன்னிட்டுக் குழந்தைகளுக்கு இலவசமாகத் தசாவதாரக் கதைகள் அனுப்பி வைக்கப்படும்.

விருப்பமுள்ள குழந்தைகள் ஒரு கார்டில் ஒருபுறம் ''ஸ்ரீ கிருஷ்ணாய நம:'' என்று எழுதி மறுபுறம் தங்கள் விலாசத்தைத் தெளிவாக எழுதி கீதா தர்ம ட்ரஸ்ட், கஞ்சநாயக்கன் பட்டி, சேலம், என்ற முகவரிக்கு ஜூலை 25-ம் தேதிக்குள்ளாகப் போய்ச் சேரும்படியாக அனுப்பி வைக்க வேண்டும்.

காஞ்சி மானேஜர்
ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி மடம்

● The exclusive interview with Mr Devaraj Urs is timely as well as enlightening 'திருமதி காந்தியிடம் எனக்கு எவ்வித மனத்தாங்கலும் கிடையாது. அவருக்கு நல்லவற்றையே விரும்புகிறேன்' என்ற வரிகள் அவரது பெருந்தன்மையைப் பிரதிபலிக்கின்றன. அர்ஸ் என்ற ஏணி மூலம் சிக்மகளூரில் வெற்றி பெற்ற திருமதி காந்தி இன்று அந்த ஏணியை எட்டி உதைப்பது 'நன்றி' என்ற வார்த்தையே அவருக்குத் தெரியாது என உணர்த்துவதாகும்.

திருச்சி—8 எஸ். பி. முருகையன்

● கல்கியில் பூங்குழலியைக் கண்டு களித்துப் பத்து வருடங்களுக்கு மேலாகிறது. இன்று 8—7—79-ல் மறுபடியும் பார்த்துக் களிப்படையச் செய்து விட்டார், இலந்தை சு. ராமசாமி அவர்கள். அவரின் ஒவ்வொரு வரியைப் படித்ததும் மெய்சிலிர்த்துப் போனேன்.

திருப்பத்தூர் எஸ். கொரியா

● தலையங்கம் நடுநிலைமையோடு எழுதியுள்ளீர்கள். போகாரோவில் இறந்தவர்களுக்கும், காயம் பட்டவர்களுக்கும் ஓர் அனுதாபம் தெரிவிக்காமல் போனது பற்றி வருத்தம் தெரிவித்துக் கொள்கிறேன். அரசாங்கம் சீக்கிரம் ஒரு நல்ல முடிவைக் காவலர்களுக்கு அளிக்கும் என்று நம்புகிறேன்.

கொச்சின் எம். கனகராஜ்

● நிறையப் புத்தகங்கள் படிக்கும் வழக்கம் உள்ளவர்களுக்கு 'Reading is living' என்று Dean Acheson ஒருமுறை குறிப்பிட்டதன் முழு அர்த்தம் விளங்கும். அவ்வாறிருக்க ஒரு கணம் பார்வையற்றவர்களின் நிலையில் நம்மை நிறுத்திப் பார்த்தால் வாழ்க்கையே அர்த்தமற்றதாகத் தோன்றுகிறது.

பார்வையற்ற மாணவர்களின் அறிவுக் கண்களைத் திறக்க இயன்ற உதவியைச் செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு இயங்கி வருகின்றது 'கண் பார்வை அற்றோர்க்கு படிப்போர் சங்கம்' (Readers Association for the blind.)

உறுப்பினர்கள் பிரதிபலன் ஒன்றையும் எதிர்பாராது, மன நிறைவுக்காக மட்டுமே பார்வையற்ற மாணவர்களுக்குப் பாடங்களை உரக்கப் படித்தும், அவர்களுக்குப் பரீட்சை எழுதியும் வருகின்றனர்.

ஆங்கிலம், தமிழ் சரளமாகப் படிக்கவும் எழுதவும் தெரிந்த, ஓய்வு நேரமும், சேவையில் உண்மையான ஆர்வமும் உடையவர்கள் இப் பணியில் ஈடுபட விரும்பினால் கீழ்க்கண்ட முகவரிக்குத் தொடர்பு கொள்ளவும்.

திருமதி அன்னம் நாராயணன், 14, காம்ப்ரே சுலட், விக்டோரியா கிரெஸண்ட், எழும்பூர், சென்னை—600008.

# ஸ்ரீராம ஜெயம்

ஜோதிடம் மூட நம்பிக்கை என்பதை வலியுறுத்துகிறாரா அல்லது உழைப்பின் மகிமையை விளக்குகிறாரா என்றெல்லாம் குழப்பிக் கொள்ள வேண்டாம். குழப்படி இல்லாமல் படத்தை இயக்கி இருக்கிறாரே முக்தா. வி. சீனிவாசன் — அதற்காக அவரைப் பாராட்டுவோம்.

தலைப்பு, பக்திப்படமோ என்ற எண்ணத்தைக் கொடுத்தாலும் உண்மையில் தேங்காய் சீனிவாசனைக் கதாநாயகனாகக் கொண்ட 'காமெடி' படம்தான். ஜோதிடத்தில் நம்பிக்கை கொண்டு அதிர்ஷ்டத்தை எதிர்பார்த்து உழைப்பைப் புறக்கணித்து வாழும் ஸ்ரீராமனைக் (தேங்காய்) காதலித்து மணந்து கொண்டு ஆனால் அவனுக்கு மனைவியாக வாழ நிபந்தனைகளை விதிக்கிறாள் ஜெயம் (சுஜாதா). அந்த நிபந்தனைகள், தன் கணவனிடமுள்ள கைத்திறனை வெளிப்படுத்தி உழைப்பினால் உயர்த்துவதற்காகவே உருவாக்கப் பட்டவை. இந்த உள்நோக்கம் கணவனுக்குத் தெரியாத வகையில் அதை நிறைவேற்றுவதற்காக ஜெயா எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைத்தான் சிரிப்பூட்டும் வகையில் ஸ்ரீராம ஜெயமாக உருவாக்கியுள்ளார் கதாசிரியர் கலைமணி. வசனங்கள் பல இடங்களில் ரசிக்கும்படியும் மனம் விட்டுச் சிரிக்கும்படியும் இருந்தாலும் சில இடங்கள் பச்சையாக—முகம் சுளிக்கவும் வைக்கின்றன.

வித்தியாசமான கதாநாயகனாகத் தேங்காய் சிறப்பாகச் செய்திருக்கிறார். மனைவியை நெருங்க முடியாத் தன் தாபங்களைப் படம் பார்ப்போர் சிரித்து மகிழும்படி சித்திரித் திருப்பது பாராட்டுக்குரியது. உழைப்பில் ஈடுபடச் செய்யும் மனைவியாக சுஜாதா ரொம்ப இயற்கையாக லாகவமாக நடித்துள்ளார். பின் பாதியில் அவரது முயற்சிகள் விபரீத விளைவுகளைத் தரும் கட்டங்களில் கண்ணீர் வடித்துப் படம் பார்ப்பவரின் நெஞ்சங்களையும் நெகிழ வைக்கும் அளவுக்கு 'டாப்'பாக இருக்கிறது அவர் நடிப்பு. வித்தைக் காரராக வரும் வி. கே. ராமசாமி, பதவிகளைப் பறி கொடுப்பவராக வரும் கருணிராஜன், அவரது சங்கீத மகனாக வரும் ஸ்ரீகாந்த், அவரது சகா ஐசரி வேலன், குறி சொல்லுபவராகத் தோன்றும் மனோரமா, புதுமுகம் சரோஜா — ஆகியோர் இந்தச் சிரிப்புப் படத்துக்குக் கலகலப்பூட்டுகிறார்கள்.

சம்பத் காமிராவைச் சிறப்பாகக் கையாண்டு இந்த வண்ணப் படத்தை ரசிக்கும்படி செய்திருக்கிறார்.

கவலைகளை மறந்து கொஞ்சநேரம் கலகலப்பாகச் சிரித்து மகிழுவதற்கு ஸ்ரீராமஜெபம் பண்ணலாம்—
சாரி! ஸ்ரீராம ஜெயம்பார்க்கலாம்!

-கௌசிகன்



# நிஜமான சுகம் வரும் வரை..



-பர்வதவர்த்தனி

வீட்டுக்குள்ளிருந்து வந்து கொண்டிருந்த பேச்சுக் குரலைக் கேட்டு எழுந்து உட்கார்ந்தான் திண்ணை மீது படுத்திருந்த ராஜாபாதர்.

ஒன்று அந்த வீட்டு அம்மாளின் குரல்.

மற்றொன்று –

அது சாமிநாதனின் மகள் லட்சுமியாகத் தானிருக்க வேண்டும். அவள்தான் வார்த்தைகளை அப்படி நீட்டி நீட்டிப் பேசுவாள். உள்ளே அம்மாவுக்குத் துணையாக இருக்கும்.

ஊருக்குப் போகிற அவசரத்திலே அய்யா வந்து வேணுவை வீட்டுக்குக் காவலா படுத்துக்கச் சொன்னதும், அந்தப் பய நீங்க போங்கப்பான்னு என்னை அனுப்பிட்டுக் குடிசையிலேயே முடங்கிட்டதும் எத்தனை நல்லதாப் போச்சு?

காதைத் தீட்டிக் கொண்டான் ராஜா பாதர்.

"ஏண்டி லட்சுமி? உங்கப்பன் உனக்குக் கல்யாணம் கட்டி வைக்கிறதா எண்ணி வச்சிருக்கானா?"

"என்னம்மா அப்படிக் கேட்டுட்டீங்க? எனக்கென்ன அப்படி வயசாயிடுச்சி?"

"ஏன்? நீயென்ன பச்சைக் குழந்தையா? நம்ம வீட்டு லீலாவுக்குக் கல்யாணமாகி..., அவளோட பையன் நாலாம் கிளாஸ் படிக்கிறான். நீ லீலாவுக்கு ஒரு வருஷம் முன்னாலே பொறந்தவ இல்லையோ?"

"இருக்கும்."

"நாளைக்கு உங்கப்பா இந்தப் பக்கம் வந்தால் கேட்கப் போகிறேன்!"

"..."

"அது போகட்டும். உன் மனசிலே யாரை யாவது நெனைச்சிக்கிட்டிருக்கியா?"

ராஜாபாதர் காதை ஜன்னலோரம் வைத்தான்.

"போங்கம்மா. பேசாமத் தூங்குங்க."

"நான் தூங்கறதிருக்கட்டும். சும்மா சொல்லுடி."

"அதெல்லாம் ஒண்ணுமில்லே."

"என்கிட்டே சொல்றதாலே ஒனக்கு லாபம்தான்."

"வந்து... எங்க வீட்டுக்கெதிரில் இருக்கிற வேணுவை..."

"அந்த ராஜாபாதரோட மகன்?"

"அவர்தான்."

தேன் கொட்டுவது போலிருந்தது ராஜா பாதருக்கு.

"ஒனக்கொரு சந்தோஷமான செய்தி சொல்லவா? இப்படி ஜன்னல் வழியா திண்ணையை எட்டிப் பார்? உன் மனசிலே இருக்கிற அந்த வேணுதான் படுத்திட்டிருக்கான்."

ராஜாபாதர் போர்வைக்குள் ஒளிந்தான்.

விடியற்காலையில் வீட்டுக்குப் போன ராஜா பாதர் வேணுவைப் பார்த்து மனத்துக் குள்ளேயே உறுமினான்.

'டேய்! ஒனக்குக் காதலா? அதுவும் சல்லிக் காசுக்கு வழியில்லாத அந்தச் சாமிநாதனோட பொண்ணு லட்சுமியோடவா?'

தூங்கிக் கொண்டிருந்த வேணு ஒரு முறை திரும்பிப் படுத்தான்.

இடுப்பைத் துழாவினான் ராஜாபாதர். பகீரென்றது. முடிந்து வைத்திருந்த இரண்டு ரூபாயைக் காணவில்லை.

"நல்லாதான் விடிஞ்சிருக்கு பொழுது" என்று பொழுதின் மேல் பழியைப் போட்ட வாறு கீழே உட்கார்ந்தான் அவன். அவனுடைய மனைவி ரெங்கம்மா விழித்துக் கொண்டாள்.

"என்னங்க காலையிலே கடுகடுன்னு? என்ன ஆச்சு?"

"ஏய்! ஒம் பிள்ளை உருப்படுவானாடி? இல்லே கேக்கறேன். அவனுக்கு எதிர்த்த வூட்டுப் பொண் மேலே காதலாம்! அந்தப் பொண்ணு, சினிமாவிலே சுத்தறப் போல் தோப்பு தொரவுன்னு இவனோட சுத்தப் போறானாம்!"

"உங்க கிட்டே சொன்னானா?" – கண்ணை கசக்கிக் கொண்டு எழுந்த வேணு கேட்டான்.

"தொலைச்சிடுவேன். நேத்து ராத்திரி நான் அய்யா வீட்டுத் திண்ணையிலே படுத்திட்டிருந்தப்போ உள்ளார அந்தப் பொண்ணு அம்மாகிட்டே, தன்னோட மனசைத் தொறந்து இந்த உதவாக் கரைப் பயல் ஆட்றதைக் காட்டிச்சி!"

"அந்த ஆட்டத்தை நீங்களும் பார்க்க வேண்டியதுதானே?" – ரெங்கம்மா குறுக்கே கேட்டாள்.

"அடி போடி... ராத்திரி அந்தப் பொண்ணு தன் ஆசையைச் சொல்லிச்சி. அவ மருமகளா வரப் போறான்னு சொல்ற போதே இடுப்பிலே வச்சிருந்த காசைக் காணலே."

"எத்தனை?"

''முழுசா ரெண்டு ரூபாய்.''

''எங்கியாச்சும் பள்ளத்திலே விழுந்து கெடக்கும். அதுக்காவ அந்தப் பொண்ணை வையாதீங்க. அது தங்கமான பொண்ணு.''

வேணு இந்தப் பேச்சைக் கேட்டுச் சிரித்தபடி வெளியேறினான்.

இரவு மணி பத்திருக்கும்.

அருகேயிருந்த ஓலைத் திரையரங்கில் சினிமாப் பார்த்து விட்டு வந்து கொண்டிருந்தாள் லட்சுமி. தலை நிறையப் பூ!

வெற்றிலைக் கடையருகே நின்று கொண்டிருந்த வேணு வேகமாக அவள் அருகே வந்தான்.

''லெட்சுமி!''

ஒரு விநாடி நின்று திரும்பிப் பார்த்தாள் அவள். கூட்டம் கலைந்து கொண்டிருந்தது.

''நேத்து ராத்திரி ஏன் அப்படி உளறினே?''

''போங்க.''

''உளறத்தான் உளறினே... திண்ணையிலே யார் படுத்திருக்காங்கன்னு பார்த்துட்டாவது உளறக் கூடாதா?''

''ஏன்? நீங்கதானே?''

''இல்லே, எங்கப்பன்!''

''போங்க... நான் சொன்னதைக் கேட்டப்புறம் நீங்க தூங்கியிருக்க மாட்டீங்களே?''

''நல்லாத் தூங்கினேனே எங்க வீட்டிலே? நேத்து அய்யா ஊட்டுத் திண்ணையிலே தூங்காம கெடந்தது எங்கப்பா! உன்னோட வருங்கால மாமனார்!''

திகைத்து நின்றாள் லட்சுமி.

''பயப்படாதே. நான் வந்து படுத்து நீ பேசினதைக் கேட்டிருந்தா ஒண்ணுமே நடக்காம போனாலும் போயிருக்கும். நல்லவேளை. கேட்க வேண்டியவரே கேட்டுட்டு வீட்டிலே காத்திருக்கார். தானே கோபம் தணிஞ்சு...''

வேகமாக நடையைப் போட்டாள் லட்சுமி.

அவள் மனசில் சிறு குறை.

பொழுது விடிந்து எழுந்து வந்து திண்ணையை ஒரு நோட்டம் விட்டபோது அங்கே விழுந்து கிடந்த இரண்டு ரூபாயை எடுத்து வீட்டுக் காரம்மாளிடம் கொடுத்த பொழுது அவள், ''வச்சிக்க நீயே. உன் மனசிலேயிருக்கிற வேணுதான் உனக்காகப் போட்டுட்டுப் போயிருக்கான். ஆசையா பூ வாங்கி வச்சுக்க. சினிமா பார். வேணுவோட அப்பாகிட்டே சொல்லி நான் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யறேன்!'' என்று அதை அவளிடமே திருப்பிக் கொடுக்க, லட்சுமியும் இன்பக் கிளுகிளுப்பில் தன்னை ஆழ்த்திக் கொண்டு பூச்சரம் குலுங்கச் சினிமா பார்த்து விட்டுத் திரும்பி வருகிற பொழுது...

'இந்த வேணு வந்து உண்மையைச் சொல்லாமலே இருக்கப் படாதா?'

கற்பனைச் சுகத்தில் மிதந்து கிடந்த லட்சுமி அது விடுபட்ட வெறியில் ஒரு முறை உடல் சிலிர்த்தாள்.

நிஜமான சுகத்துக்கு அவள் நெஞ்சம் ஏங்கியது.

தன்னையறியாமல் திரும்பிப் பார்த்தாள்.

கடையோரம் தொங்கிய கயிறு முனை நெருப்பில் பீடி பற்ற வைத்துக் கொண்டிருந்தான் வேணு.

குலுங்கலான சிரிப்பொன்றை உதிர்த்து விட்டு மேலே போனாள் லட்சுமி.



# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

ஜெயகாந்தன்

## 4. சுபச் செய்தி!

**ம**ருடேசன் பிள்ளை சீரும் சிறப்புமாய் வாழ்ந்திருந்த பெரிய வீட்டில், அவர் எந்த இடத்தில் இருந்து இறுதியாகத் தமது சொந்தங்களைப் பார்த்துக் கண்மூடித் துயின்றாரோ அதே படுக்கையறையில் அந்தப் பெரிய படத்தைக் கொண்டு வந்து வைத்தான் வைத்தி.

''ஆமாம், அண்ணாத்தே! நம்ம அப்பாவோட படம் நம்ப வீட்டிலேதான் இருக்கணும்... அப்படியே கண்ணெதிரே அப்பாவே வந்து உட்கார்ந்திருக்கிற மாதிரி வரைஞ்சிருக்கானில்லே?'' என்று படத்தைப் பார்த்து ரசித்துப் பெருமைப் பட்டுக் கொண்டான் வைத்தி. அவனுக்குத் தெரியாது இந்தப் படத்தை வரைந்தவனே இந்த அண்ணாத்தைதான் என்று. அந்த விஷயம் யாருக்குமே தெரியாது. சிங்காரம் தனது கைவிரல்களை நெரித்துக் கொண்டே அந்தப் படத்தைப் பார்த்துப் பார்த்து ஆயிரம் யோசனைகளில் மூழ்கினான்.

நம்ப அப்பா — நம்ப வீடு என்பதெல்லாம் எவ்வளவு பொய்யான விஷயங்கள் என்று சிங்காரத்துக்குத் தோன்றுவது ஒன்றும் வேதாந்த விசாரம் அல்ல. இந்த நேரத்தில் இந்த வீட்டின் மீது வாங்கிய கடனுக்காக, இந்த வீட்டை ஏலத்தில் கொண்டு வந்து தெருவில் நின்று தமுக்கடிப்பதற்காக அந்தத்



துபாஷின் மகன் கோர்ட்டில் 'டிகிரி' வாங்க முயற்சி செய்து கொண்டிருக்கிற விஷயத்தைச் சிங்காரம் அறிந்திருந்தான். அப்போது எவனெவனோ இந்த மருதேசன் பிள்ளை வீட்டுக்குள் புகுந்து எல்லாச் சாமான்களையும் கொண்டு போய்த் தெருவில் போடுவான். இந்தக் குடும்பத்திற்குச் சொந்தமான அரண்மனை போன்ற இந்த வீட்டிலிருந்து இந்த அந்தப்புரத்தில் மகாசபை நடத்திக் கொண்டிருந்த மகாராணிகளையெல்லாம் தெருவில் இழுத்து நிறுத்திவிட்டு, இதைப் பூட்டிச் சாவியை இடுப்பில் செருகிக் கொண்டு அந்தத் துபாஷின் ஆட்கள் போகிற அந்தக் காட்சியை அந்தப் படத்தின் மீது கண்டு கொண்டிருந்தான் சிங்காரம்.

இந்த வீட்டில் அடுப்புப் புகைவதற்குங் கூட வழியில்லாத தரித்திரம் குடிபுகுந்து விட்டது. இந்த வீடு முழுவதும் நிறைந்து கிடக்கும் அலங்காரப் பொருள்களெல்லாம் களையிழந்து கிடக்கின்றன. சர விளக்குகளும், லஸ்தர்களும் ஒட்டடையும் நூலாம்படையும் படிந்து பொலிவிழந்து கிடக்கின்றன. ஊஞ்சல் ஓரம், வட்ட மேஜைகளும், கூடத்தில் கருட் டிச்கருணைகளாக வைத்திருக்கும் பிரப்பம்



பாய்களும் ரத்தின ஜமுக்காளங்களும் இந்தச் சூனியமான வீட்டில் வெறும் சுமைகளாகவும் குப்பைகளாகவும் இருந்து சில தினங்களில் கொள்ளை போகுமே என்ற நினைப்பில் சிங்காரத்தின் உடம்பில் ஒரு அவசரம் பிறக்கிறது.

''தம்பீ....தம்பீ....'' என்று இரண்டு முறை கூப்பிட்டும் பதில் வராததால் ''அடேய் வைத்தி!'' என்று அலறினான் சிங்காரம்.

வைத்தி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடி வந்தான்.

''சீக்கிரம் ஒரு வண்டி ஏற்பாடு பண்ணு. இந்த வீட்டிலிருக்கும் எல்லாச் சாமான்களையும் சீக்கிரம் அப்புறப்படுத்த வேணும். நான் போயி இதையெல்லாம் விக்கறதுக்கு ஒரு ஏற்பாடு பண்ணிவிட்டு வரேன். நீ எல்லாத்தையும் கழட்டு....'' என்று சொல்லிக்கொண்டே ஆவேசம் வந்தது போல் பக்கத்திலிருந்த ஒரு பேனாக் கத்தியால் சரேலென மருதேசன் பிள்ளைப் படத்தைக் கீறிக் கிழித்தான் சிங்காரம்.

''அண்ணாத்தே... நம்ப அப்பா!'' என்று அலறினான் வைத்தி. கையிலிருந்த கத்தியை வீசியெறிந்து விட்டு, சிங்காரம் தானைக் கட்டிப் பிடித்துக் கொண்டு ஒரு மிருகம் பிளிறுவது போல் கதறி அழுதான்.

''அண்ணாத்தே .... அண்ணாத்தே!'' என்று வைத்தி, சிங்காரத்தின் தோளைப் பற்றிக் கொண்டு குலுங்கினான்.

''நம்ம கஷ்டமெல்லாம் சீக்கிரம் விடிஞ்சிடும். மனசைத் தளர விடாதே அண்ணாத்தே'' என்று பெரியவன் மாதிரி ஆறுதல் சொன்ன போதிலும், அந்தத் தம்பி குழந்தை மாதிரி அழுதான்.

''இந்த வீடு, நம்ப சொத்து— தோப்பு வயல் எல்லாம் ஏலத்திலே போகப் போகுது!....அதிலே அப்பாவோட படமும் போகவேணும்; நாம்ப எங்காவது குடிசை வீட்டிலே கூட வாழலாம், கஷ்டம் விடியற வரைக்கும் நம்ப அப்பா படத்தை அங்கே கொண்டு வைக்கலாமா? அதனாலேதான் — இருக்க நிழல்கூட இல்லாத ஏழைங்களா ஆயிட்ட நம்ப அப்பான்னு இந்தப் படத்தை வெச்சி அவரை அவமானப்படுத்த வேணும்னு தான் இதைக் கிழிச்சேன்'' என்று அழுகை அடங்கி, சிவந்த கண்களும் நெரிந்த புருவங்களுமாய்ப் புத்திபேதலித்தவன் போல் பேசிக் கொண்டிருந்தான் சிங்காரம்.

நல்ல வேளையாக இதெல்லாம் நடந்த நேரத்தில் அமுது அவ்வையார்ப் பாட்டியிடம் சீராடப் போயிருந்தாள். வீட்டில் வேறு யாரும் இல்லை. இந்த வைத்தியின் முன்னால் தான் அழுததை வேறு யாரும் பார்க்கவில்லை என்று திடப்படுத்திக் கொண்டான் சிங்காரம்.

''வைத்தி! சீக்கிரம் நான் சொன்ன மாதிரி இதெல்லாம் வித்து ஒழிச்சிடுவோம். அமுதுவுக்குத்தான் வீடு இருக்கு. நீயும் காந்திமக்காவும் சின்னம்மாவோட இருந்துக்கலாம். நான் இந்தச் சாமான்களை யெல்லாம்வித்து ஏதாவது வியாபாரம் செய்யலாம்னு யோசிக்கிறேன். நீ எனக்கு உதவியா இருப்பே இல்லே? கொஞ்சம் பல்லைக் கடிச்சிக்கிட்டு இந்தக் கேசு முடியறவரைக்கும் காலம் தள்

**மே**ற்கு ஜெர்மானிய யுவதி எரிகாவை ஜெய்ப்பூரில் தன் சைரிக்ஷாவில் வைத்து இழுத்துப் போனான் கோபால் சிங்.

எரிகா, விண்ணென்று புடைத்தெழும் அவனது தோள்களைப் பார்த்தாள். முதுகிலே நெளிந்திடும் தசைகளை நோக்கினாள். 'இவனல்லவோ ஆண்மகன்' என எண்ணினாள். அவன் மீது காதல் கொண்டாள்.

ஆயினும் "என்னை மணந்து கொள்கிறாயா?" என்று அவள் கேட்கவில்லை. 'கோபால்சிங் முதலில் பேசட்டும்' என்று காத்திருந்தாள், பெண்ணுக்குரிய இயல்போடு. ஆண்மகன் ஏமாற்றமளிக்கவில்லை.

இருவரும் ஒரு டீக்கடையில் சாய் அருந்திக் கொண்டிருந்த போது கோபால்சிங் துணிந்து கல்யாணப் பேச்சைத் துவக்கினான். எரிகா புளகாங்கிதமுற்று ஒப்புதல் தந்தாள்.

ஆரிய சமாஜ விதிமுறைகளின்படி இருவரும் திருமணம் செய்து கொண்டனர். பின்னர் திருமணத்தைப் பதிவு செய்யப் பதிவாளர் அலுவலகம் சென்றனர்.

பதிவாளர் எரிகாவின் பயண தஸ்தாவேஜுகளைப் பார்த்தார். விஸா, – பாரதத்துக்குள் நுழைவு அனுமதி – சரியில்லை, காலாவதியாகி விட்டது என்று கண்டார். திருமண மனுவைப் பதிவாளர் நிராகரித்தார்.

போலீஸ் வந்தது. எரிகா மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்தது. எரிகா தன் விசாவை மாற்றி அமைத்து மோசடி செய்யப் பார்த்திருக்கிறாள். அதை மறைப்பதற்கு ஒரு தந்திரமாகக் காதல் – கல்யாணம் என்று நாடகமாடி யிருக்கிறாள் என்று போலீசார் நம்புகிறார்கள்.

எரிகாவின் தோழி ஒருத்தி ஏற்கனவே விஸாவில் மாற்றங்கள் செய்து அதற்காகச் சிறைத் தண்டனை அனுபவித்து வருகிறாள்!

கோபால் சிங் – எரிகா காதல்கதையின் முடிவு இதுதானா? அல்லது மறுபடியும் திடீர் திருப்பம் ஏதும் ஏற்படுமா?

## கலகலப்பு ஏற்படுத்திய ஒரு காதல் கதை



விட்டா போதும். பெரியசாமி மேலே நாம் போட்டிருக்கிற கேஸ் ஜெயிச்சுட்டா நமக்குப் பாதி சொத்தாவது திரும்பி வரும். இப்ப வர ஜப்தியும் ஏலமும் நான் வாங்கின கடனுக்குத் தானே? ஏண்டா மண்டேகம் நான் சொல்றதெல்லாம் உனக்குப் புரியுதா?" என்று நடுவில் இரைந்து கத்தினான் சிங்காரம்.

"புரியுது அண்ணாத்தே! அதைப் பத்தி எதுக்குக் கவலைப்படறே? இப்ப என்ன பண்ணணும் – இதையெல்லாம் ஒரு வண்டிகொண்டு வந்து ஏத்திக்கிட்டுப் போயி எங்கே இறக்கணும்னு சொல்லு; அதைச் செய்வோம்" என்று எதற்கும் கவலைப்படாத உறுதியுடன் சொன்னான் வைத்தி. சிங்காரத்துக்குத் தம்பியின் ஆறுதல் சற்றுத் தெம்பு அளித்தது.

தம்பியைக் கையில் ஒரு குழந்தை போல் பற்றி பிடித்து அழைத்துக் கொண்டு அந்தப் பெரிய மூன்று கட்டு வீட்டின் எல்லாப் பகுதிகளையும் ஒரு முறை பார்வையிட்டான் சிங்காரம். அந்த வீட்டைக் கட்டிய மூதாதையர்களின் குரல்களெல்லாம் தன்னையும் தனது தரித்திர நிலையையும் கண்டு எள்ளிச் சிரிப்பது போல் கற்பனையில் கேட்டது அவனுக்கு.

"**அ**முதா முழுகாமலிருக்கிறாள்" என்று காந்திமதி வந்து உற்சாகமாகச் சொன்னாள் சிங்காரத்திடம். சிங்காரம் பீடிச் சாம்பலைக் கண்டு விரலால் தட்டியவாறு "இப்ப இது ஒண்ணுதான் குறைச்சல்" என்று அலட்சியமாகத் திரும்பிக்கூடப் பாராமல் சொன்னான்.

"அதென்னடா தம்பி! அப்படிச் சொல்லிட்டே. மருதேசன் பிள்ளையே வந்து பொறந்து அத்தனை சொத்துக்களை மீட்டுத் தந்தார்னு வேணும்னு சொல்லுவே! உனக்கு என்ன குறைச்சல் இப்போ! காசும் பணமுமா கடைசி வரைக்கும் வரும்.... பெத்த பிள்ளைகள்தான் வரும் .. தலைச்சன் குழந்தைக்குத் தகப்பனாகப் போறேன்னு சந்தோஷச் சமாசாரம் சொல்றேன் – இந்தா இதை என் வாயிலே போடு" என்று சிங்காரத்தின் கையில் மடியிலிருந்து ஒரு கற்கண்டு கட்டியை எடுத்துக் கொடுத்து அவனை உற்சாகப்படுத்தினாள். அவனும் ஒப்புக்குச் சிரித்துக் காந்திமதியின் வாயில் அந்தக் கற்கண்டுத் துண்டைப் போட்டு "உன்வாய் முகூர்த்தம் அப்பாவே பிறந்து வரட்டும்" என்று சொன்னான். அப்போதும் அவன் கண்கள் கலங்கின.

"அப்பா வந்து பிறந்தால் அவருக்குச் சொந்தமாய் ஒரு வீடுகூட இருக்காது" என்று குரல் கம்மச் சொன்னான்.

"ஏன்? அதுக்காகத்தானே ஐம்பது வயசுக்கும் மேலே ஒரு கல்யாணம் பண்ணி, சின்னம்மாவுக்கு வீடும் நிலமும் எழுதி வெச்சிட்டுப் போனார். இப்ப உனக்கு ஆண் குழந்தை பொறந்தா மருதேசன்னு பேரு வைச்சு, கோதை சின்னம்மாவோட பங்கையெல்லாம் அவன் மேலே தானே எழுதி வைக்கப் போறாங்க... தெரியாதா உனக்கு! அதிர்ஷ்டம் வருதுடா தம்பி" என்று சிங்காரத்தின் கன்னத்தை வழித்துத் திருஷ்டி கழித்துவிட்டு இந்தச் சுப செய்தியைக் கோதையிடம் சொல்வதற்கான அவசரத்தில் ஓடினாள் காந்திமதி.

(தொடரும்)

சந்தோஷமாய், உல்லாசமாய், லேசாய் இருந்த மனத்தைச் சாயந்தரம் ஐந்துமணிக்கு மேல் கெடுத்துக் கனமாக்கிக் கொண்டேன்.

காரணம்? ஆபீஸ் நண்பன் கணேசன்தான்.

டைப்ரைட்டரின் முன் உட்கார்ந்திருந்த என்னிடம் வேகவேகமாய் வந்தவன், டைப்ரைட்டரின் சிலிண்டரில் படிந்திருந்த பேப்பரை உருவி எறிந்தான்.

''இன்னமும் ஏன்டா ஆபீஸைக் கட்டிட்டு அழறே? மணி அஞ்சாறதே... ம்... எழுந்துரு...''

''கணேசா!ஒரே லெட்டர்..அஞ்சு நிமிஷத்துல அடிச்சுடறேன்... இல்லாட்டி மானேஜர் முசுடு... நாளைக்கு காத்தாலே ஸ்டெனோ முன்னாடி பட்லர் இங்கிலீஷிலே பிச்சி உதறிடுவார்...''

''ஆங்! ... கிழிப்பான்... சர்த்தான் நட்ரு... இன்னிக்கு உன்னை ஒரு இடத்துக்கு கூட்டிட்டுப் போகப் போறேன்... அதான் இவ்வளவு அவசரம்... ம்... க்விக்...''

''எங்கடா?''

''நீ ரொம்ப நாளா ஒருத்தரைப் பார்க்கணும்னு சொல்லிட்டிருந்தியே... அவர் கிட்டே...''

நான் யோசித்தேன். யாரைப் பார்க்கணும்னு இவன்கிட்டே சொல்லியிருந்தேன்... ஜீனத் அம்மனை ஒரு தடவை கிட்டேயிருந்து பார்க்கணும்னு சொன்னதா ஞாபகம்... கேட்டேன்.

''ஜீனத் அமனு?''

''உன்னோட தலை...!'' – சீறினான் கணேசன்.

''பின்னே?''

''கைரேகை மன்னன் ஜெயகுரு சுவாமிகள்.''

நான் வியப்பில் அதிர்ந்தேன். ''சுவிட்?''

''ஆமான்டா... என்னோட பிரண்ட் ஒருத்தன் மில் ஓனர் சதானந்தம் வீட்டிலே டிரைவரா இருக்கான். அவனை இன்னிக்கு மத்தியானம் பார்த்தேன். மில் ஓனர் வீட்டுக்கு இன்னிக்கு சாயந்திரம் அஞ்சரை மணிக்கு சுவாமிகள் வர்றாராம்... யார் வேணுமின்னாலும் கையைக் காட்டலாமாம்... ஆனா... முக்கியமான ஏதாவது ஒன்னை மட்டும்... நடக்கப் போறதைச் சொல்லுவாராம்...''

நான் தயங்கினேன். ''இன்னிக்கா?''

''ஏன்டா இழுக்கிறே?''

''இல்லே என்னோட ஒய்ப் ஜெயா பிக்ச



ருக்குப் போகலாம்னு சொல்லிண்டிருந்தா... போகாட்டி அவளுக்குக் கோபம் வந்துடும்..''

''சரியான பெண்டாட்டி தாசன்டா நீ... ஜெயகுரு சுவாமிகளை பார்க்கணும்.. ஆயுசுலே ஒரு தடவையாவது அவர்கிட்டே கையைக் காட்டணும்னு எத்தினி தடவை எங்கிட்டே சொல்லியிருக்கே... இப்ப என்னடான்னு பொண்டாட்டிங்கிறே... சினிமாங்கிறே...''

நான் புது வேகத்தோடு எழுந்தேன்.

''சரி... நட்ரு...''

என் மனைவி ஜெயாவின் சினிமா ஆசையை நொறுக்கி விட்டு - ஜெயகுரு சுவாமிகளைப் பார்க்கப் புறப்பட்டேன்.

அங்கே எண்ணி இருபது பேர் இருந்தனர். மில் ஓனர் சதானந்தம் பங்களாவின் உட்புற ஹாலில் ஜமுக்காளம் விரிக்கப்பட்டு — ஆளுயர குத்து விளக்குகள் ஏற்றப்பட்டு — கனி வர்க்கங்கள் அடங்கிய வெள்ளித்தாம்பாளம் வைக்கப்பட்டு...

உண்மையாகவே தெய்விக மணம் கமழ்ந்தது அங்கே!

காவி தரித்த மேனியில் பழுத்த சிவப் பழமாய்த் திகழ்ந்தார் ஜெயகுரு சுவாமிகள். விரிந்திருந்த உள்ளங்கைகள் தாமரை புஷ்பங்களை நினைவுபடுத்தின.

ஏதேதோ ஸ்தோத்திரங்களை ஸ்பஷ்டமாக உச்சரித்து — தமிழில் விளக்கம் சொன்னார். அடிக்கடி புன்னகை பூத்தார்.

அரைமணி நேரம் கழித்து ஒவ்வொருவராராய்க் கைகளைக் காட்ட ஆரம்பித்தனர்.

கையை ஒருகணம் பார்த்து — கண்களை மூடி — சில கணங்கள் கழித்துத் திறக்கிறார். கைக்கு உரியவரைப் பார்க்கிறார். உடனே உதடுகளினின்றும் வார்த்தைகள் பிறக்கின்றன.

''புது முயற்சி எதுவும் வேண்டாம்...''

அடுத்தவர் கையை நீட்ட...

''வீணான சந்தேகங்கள். மனைவியை நம்பு...''

இன்னொருவர் கைநீட்ட...

''வியாபாரத்தில் அகலக்கால் வைக்கவேண்டாம்...''

நான் கையை நீட்டினேன். மனம் தடக் தடக்கென்று கோவை எக்ஸ்பிரஸாய் அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. ஜெயகுரு சுவாமிகள் என் கையை ஒரு விநாடி பார்த்து விட்டு — விழிகளை மூடித் திறந்து — மெல்லிய குரலில் சொன்னார்.

''உமக்குச் சீக்கிரமே இரண்டாவது கல்யாணம் ஆகப் போகிறது...''

நான் சர்வாங்கமும் அதிர்ந்தேன்.

எல்லோரும் என்னையே அனுதாபத்தோடு பார்ப்பது புரிந்தது. அடுத்தவர் கைநீட்ட என்னைத் தள்ளிக் கொண்டு வர — நான் கூடத்தை விட்டு வெளியே வந்தேன்.

கணேசன் என் தோளை ஆதரவோடு பற்றினன்.

''என்னடா இப்படிச் சொல்லிட்டார்...?''

நான் முகம் வெந்து போய் உதடுகளைக் கடித்துக் கொண்டு வெற்றுப் பார்வையால் வெறித்தேன். நெஞ்சில் கனம் ஏறிக் கொண்டது.

எனக்கு இரண்டாவது கல்யாணமா?

என் மனைவி ஜெயாவின் இழப்பில்தானே இது சாத்தியம்? என் ஜெயாவை இழந்து விட்டு என்னால் இருக்க முடியுமா?

கணேசன் செயற்கையான உற்சாகத்தை வரவழைத்துக் கொண்டு — கலகலப்பாகப் பேசுவதற்கு முயற்சி செய்தான்.

''டேய்... அவர் சொன்னதை ஒண்ணும் மனசிலே வெச்சுக்காதே! ஜோசியம் முழுக்க முழுக்க உண்மையில்லே... பாதி பொய்... பாதி நிஜம்... உனக்காவது இரண்டாவது கல்யாணமாவது? தைரியமா இரு...''

ஆனால் என் மனம் ஏற்க மறுத்தது.

'போன மாசமே ஜெயந்தி மார்புவலியாலே அவதிப் பட்டிருந்தா... அந்த மார்பு வலிதான் அவளை எங்கிட்டேயிருந்து பிரிச்சுக்கிட்டுப் போயிடுமோ...?'

நினைக்கவே நடுக்கமாயிருந்தது எனக்கு. வீட்டை நெருங்கினேன்.

கணேசன் என் முதுகில் தட்டினான்.

''டேய்! ஜோசியம் பார்த்ததை உன்னோட ஒய்ஃப்கிட்டே சொல்லாதே... பீ. கொய்ட்... மூஞ்சியை 'உம்'ன்னு வெச்சுக்காதே... சிரிச்சமாதிரி வெச்சுக்கோ...'' அவன் போய் விட்டான். நான் தலையாட்டி விட்டு உள்ளே போனேன்.

ஜெயா சமையலறையில் ஏதோ வேலையாக இருப்பது தெரிந்தது. ஓசைப்படாமல் ஷர்ட்டைக் கழற்றி ஹேங்கரில் மாட்டிவிட்டு நாற்காலியில் தொய்வோடு சாய்ந்தேன். பிரம்பு நாற்காலி அது. கழுத்தில் கத்தி விழுந்த கோழியாய்க் கத்தியது.

ஜெயா சமையலறையினின்றும் எட்டிப் பார்த்தாள்.



''இப்பத்தான் வந்தீங்களா? சினிமாவுக்கு கூட்டிட்டுப் போறதா சொன்னீங்களே? மறந்துட்டதா?'' — கோபத்தோடு கொஞ்சி னாள். முகத்தில் மஞ்சள் மின்னியது. குங்கு மம் சிரித்தது.

''ஆபீஸ்லே மீட்டிங்... திடீர்னு அரேஞ்ச் பண்ணிட்டாங்க''... மென்று விழுங்கினேன்.

சினிமா விவகாரத்தை அதோடு விட்டு விட்டு — ஜெயா புன்னகைத்துக் கொண்டே என்னருகே வந்தாள். ''இன்னிக்கு ஒரு சந் தோஷமான சமாசாரம்'' என்றாள்.

'என்ன?' — என்பது போல் புருவத்தை நெளித்தேன்.

ஜெயா ஷெல்ப் அருகே சென்று — ஒரு புத்தகத்தின் மேல் இருந்த அந்தக் கடிதத்தை எடுத்து வந்தாள். என்னிடம் நீட்டினாள்.

''யார் எழுதியிருக்கா?''

''ம்... படிச்சுப் பாருங்க...'' சொன்ன வள், முகம் வெட்கத்தில் சிவந்தது.

நான் முகத்தில் ஆயிரம் கேள்விக் குறிகள் மோதக் கடிதத்தைப் பார்த்தேன். என் மூத்த மகன் பம்பாயிலிருந்து எழுதியிருந்தான்.

தேவரீர் அப்பா அவர்களுக்கு.

தண்டபாணி வணக்கத்துடன் எழுதிக் கொண்டது. இங்கு நானும் தங்கள் மருமகள் மகாலட்சுமியும் குழந்தைகள் சிவா, ரகு, அபர்ணா எல்லோரும் நலம்.

நேத்து கண்ணப்ப மாமா இங்கு வீட்டுக்கு வந்திருந்தார். உங்களுக்கு அடுத்த மாதம் அறுபதுக்கு அறுபது நிறைகிறது என்றும் — அந்த சஷ்டியப்த பூர்த்தியைச் சிறப்பாக நடத்த வேண்டுமென்றும் சொன்னார். இந்த மகிழ்ச்சியான செய்தியைக் கேட்டு எல்லோ ரும் பூரித்துப் போனோம். இந்தச் செய்தியை பெங்களூரில் இருக்கும் தம்பி ரவிக்கும் — விஜயவாடாவில் இருக்கும் மாப்பிள்ளைக்கும் தங்கை வந்தனாவுக்கும் டிரங்கால் மூலமாய்த் தெரியப் படுத்தினேன். அவர்களும் சந் தோஷப்பட்டு இதில் கலந்து கொள்வதாகச் சொல்லியுள்ளார்கள்.

தங்களுடைய ஆபீஸ் ரிகார்ட் படி தங்க ளுக்கு இன்னமும் வயது ஐம்பத்தி ஐந்துதான் என்பதும் எனக்குத் தெரியும். எனவே சஷ்டி யப்த பூர்த்தியை அங்கே கொண்டாட முடியாது. அதற்காகப் பயந்து கொண்டு அறுபதுக்கு அறுபது நிறைவு விழாவைத் தவிர்க்கவும் முடியாது. இந்தப் பேறு எல்லோ ருக்கும் கிடைத்து விடுவதில்லை.

ஆகவே தாங்களும் அம்மாவும் அடுத்த மாதம் — முதல் வாரத்தில் ஆபீஸுக்குப் பத்து நாள் லீவு போட்டுவிட்டு பம்பாய் வரும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன். உங்களுடைய இந்த வைபவத்தை ஓர் இரண்டாவது கல்யாணத்தைப் போல் ஜாம் ஜாமென்று நடத்த விரும்புகிறோம்.

தண்டபாணி.

கடிதத்தைப் படித்து முடித்ததும் — என் மனம் மறுபடியும் சந்தோஷமாய் — உல்லாச மாய் — லேசாய் இருக்க ஆரம்பித்ததை உணர்ந்தேன்.




திருட்டுத்தனம் பண்ணியே காலத்தை ஓட்டுகிறான் கோபால். அவன் தந்தி ரங்கள் அவன் பணக்காரனாக உத வாமல் தரித்திரமே வீட்டில் தலை விரித்தாடுகிறது. கடைசியில் அவன் திருந்தி நல்லபடியாக உழைத்துச் சம்பாதிக்க வேண்டும் என்று எண் ணும்போது அவனை யாரும் நம்ப வில்லை. புலி வருகிறது கதையாகி விடுகிறது.

கடைசியில் ஒரு சேட் கோபாலை நம்பி வேலை தருகிறார். ஆனால் கோபாலால் முன்பு ஏமாற்றப்பட்ட ஒரு பணக்கார நங்கை அவன் மீது மோசடிக் குற்றம் விழுகிற மாதிரி ஏற்பாடு செய்துவிடுகிறாள். வேலை போய்க் கோபால் சிறைக்கும் போக நேரிடுகிறது.

''நான் திருந்திவிட்டால் மட்டும் போதாது. செய்த தவறுகளுக்குத் தண்டனையும் பெற வேண்டும். அதனால்தான் இப்போது செய்யாத குற்றத்துக்காகச் சிறை செல்கிறேன்'' என்று கூறிப் பிரிகிறான் கோபால்.

நல்லவர்களையே கதாநாயகர்களாகப் பார்த்து அலுத்த நமக்கு மோசமானவர்களையும் கதாநாயக னாக வைத்துக் கதை புனைய முடியும் என்பதற்கு ஓர் அடையாளமாக 'அடையாளம்' அரங்கேறி யுள்ளது. அலட்டாப்பாகப் பேசும் கோபால் பாத் திரத்தை ஏற்றுள்ள நீலகண்டன், அட்டகாசமாக நடித்துக் கலகலப்பை உண்டு பண்ணுகிறார்.

சிறுவர்கள் ரவியும் பாலசந்தரும் வயதுக்கு மீறிப் பேசினாலும் நாடகத்துக்குக் களை சேர்க்கிறார்கள்.

பழி வாங்கும் பணக்காரப் பெண்ணாக சாந்தினி யும், குடும்பத்தின் வறுமைக்கிடையிலும் கௌர வம் காக்க முயலும் கோபாலின் மனைவியாக வசந்தாவும் பழுதின்றி நடிக்கிறார்கள்.

சௌந்தர்யனின் ஒரு வித்தியாசமான நாடகத்தை டைரக்ட் செய்தவர் சேஷாத்திரி என்னும்போது அலுப்புத் தட்டாது என்று நிச்சயம் நம்பலாம். ஆனால் கருத்து பேதமாக ஒலிக்கும் ஓரிரு கதா பாத்திரங்களையும், மோசடி 1, 2, 3 என்று ஒரே போக்கில் செல்கிற சம்பவக் கோவைகளையும் அவரா லும் தவிர்க்க முடியவில்லையே?

— குட்டி கிருஷ்ணன்

# தியாக வல்லபன்

## விக்கிரமன்

### அத்தியாயம் 19

### 'என் செல்வமே!'

இருள் பிரிவதற்கு இரண்டு நாழிகைக்கு மேலிருந்தது. பறவைகள் மெல்லத் தம் சிறகுகளை அசைத்து, அன்றையத் தம் பணியைத் தொடங்க ஆயத்தம் செய்து கொண்டிருந்தன. கிழக்கே முளைத்த வெள்ளியின் பளீரென்ற ஒளி கருநீல வானில் கதிரவனுக்குக் கட்டியம் கூறுவது போல் அமைந்தது.

கேசவ சுவாமி தடியை ஊன்றிக்கொண்டு கொள்ளிடக் கரையை நோக்கிச் சென்றார். கரை ஓரமாகச் சலசலவென்று ஓடும் நீரில் அமிழ்ந்து நீராடி விஷ்ணுவின் ஆயிரத்தெட்டுத் திருநாமங்களை மெல்ல உச்சரித்தவாறு, ஈர உடையுடன் குடிலை நோக்கித் திரும்புவார். நாமாக்களைச் சொல்வதற்கும் அவர் குடிலை அடைவதற்கும் நேரம் சரியாக இருக்கும்.

அவர் வருவதற்குள் அவரது சீடர்கள் எழுந்து நீராடிக் கண்ணபிரான் திரு உருவத்தின் முன் விளக்கேற்றி அமர்ந்து, பாசுரங்களைப் பாடுவர். கீதையின் சில பகுதிகளைக் கூறுவர்.

கேசவ சுவாமியும் சேர்ந்து சொல்லுவார். பிறகு சீடர்களில் ஒருவன் நந்தவனத்தில் பூக் கொய்யச் செல்வான். ஒருவன், கொட்டிலிலுள்ள பசுக்களுக்கு வைக்கோல் போடச் செல்வான். ஒருவன் அடுப்பை மூட்டி நைவேத்தியத்துக்கு ஆயத்தம் செய்வான். இப்போது மற்றொரு கடமையும் சீடன் ஒருவனுக்குச் சேர்ந்து விட்டது. கேசவ சுவாமி அவனிடம் அந்தப் பணியை ஒப்படைத்திருந்தார். சோழ சக்கரவர்த்தி ராஜராஜனின் குழந்தைகளுள் சற்று வயதில் மூத்தவனை வளர்க்க ஒப்புக் கொண்டிருந்தார்.

சீடனுக்கு அரசிளங்குமாரனைத் தான் பேணிப் பாதுகாக்கிறோம் என்பது தெரியாது. சுவாமியின் கட்டளை, 'குழந்தையை நன்றாக வளர்க்க வேண்டும். அறிவுடையவனாக வளர்க்க வேண்டும். பக்திமானாக வளர்க்க வேண்டும். நற்குணமுடையவனாக வளர்க்க வேண்டும்' என்று கூறினார்.

சுவாமி இல்லாத போது சீடர்கள் பேசிக் கொள்வார்கள். சுவாமியின் வயதான காலத்தில் இந்தக் குழந்தையை, தாயில்லாக் குழந்தையை வளர்ப்பதாக ஏன் ஏற்றுக் கொண்டார் என்று சந்தேகத்தை எழுப்புவார்கள்.

''தாயின் பாலையே குழந்தை சுவைத்ததில்லையாம். நமது நந்தினியின் பால் இருக்கும் வரை கவலையில்லை'' என்று பசுவின் பெருமையைப் பேசுவார்கள்.

''குழந்தையின் முகத்தைப் பார்த்தால், சாதாரண குடிமகன் வீட்டுக் குழந்தைபோல் தெரியவில்லை. முகத்தில் ராஜ களை ததும்பி நிற்கிறது'' என்பான் ஒரு சீடன். ''இந்தக் குழந்தையை வளர்த்துப் பெரியவனாக, மேதையாக ஆக்கி, தனக்குப் பின் வாரிசாக நியமிக்கப் போகிறாராம்'' என்று ஒரு சீடன் கூறுவான்.

ஆக, சீடர்கள் எல்லோருமே குழந்தையைப் பற்றிய கதையை அறிந்து கொள்ள விரும்பினாலும், கேசவ சுவாமிக்குப் பயந்து வம்புப் பேச்சை மறந்திருந்தனர். குழந்தையின் அழுகுரல் கேட்கா வண்ணம் வளர்த்தனர்.

''கிருஷ்ண பகவான் எதிரே சீடர்களும், கேசவ சுவாமியும் தம்மை மறந்து பாடும் போது ஒன்றரை வயதே நிறைந்த குழந்தை உட்கார்ந்து கொண்டு தாளம் போடும்.

நெற்றியில் கீற்றுச் சந்தனமிட்டு, இடையில் பட்டுக் கட்டி, 'என் கண்ணே, கிருஷ்ணா!' என்று கேசவ சுவாமி கொஞ்சுவார்.

சோழ அரச குலத்துக் குருவாக இருந்தாலும் எளிமையைத் தவிர வேறு அறியாத, எதன் மீதும் பற்று வைக்காத சுவாமிக்குக் குழந்தையிடம் அசாத்தியப் பற்றும் பாசமும் ஏற்பட்டது, சீடர்களுக்குப் பெரு வியப்பை அளித்ததில் ஆச்சரியம் இல்லை.

''இன்னும் சில தினங்களில் நாம் வடக்கேயுள்ள திருத்தலங்களைக் காணப் புறப்படுகிறோம். திருக்கச்சி, திருவல்லிக்கேணி, திருவேங்கடம், சிம்மாசலம் என்று எம்பெருமான் உறையும் இடங்களைப் பார்த்துக் கொண்டே பத்ரி வரை போகிறோம்'' என்று சுவாமி சீடர்களிடம் தெரிவித்தார்.

''இளவரசப் பட்டாபிஷேகத்துக்குத் தாங்கள் இருந்துதானே புறப்படத் திருவுளம்?'' என்று பிரதம சீடன் கேட்டான்.

''ஆமாம்; அதற்காகத்தான் காத்திருக்கிறேன். அந்த வைபவம் நடந்த சில நாட்களுக்குள் சோழ நாட்டில் ஒரு முக்கிய மாறுதல் ஏற்படப் போகிறது'' என்று தம் விழிகளை மூடிக் கொண்டு, வருங்காலத்தில் நடப்பதை எதிரே காண்பது போல் கூறினார்.

**கடைத்தெரு**

சென்னை நகரத்துத் தெருப் பெயர்களில் உள்ள சாதிப் பெயர்கள் அழிக்கப்பட்டு வருவது தெரியும். சைதாப்பேட்டையில் கள்ளுக்கடைத் தெரு என்பதும் கள்ளை இழந்து விட்டுக் ''கடைத் தெரு'' என்று ஆகியுள்ளது.

— பெ

சீடனின் உடல் சிலிர்த்தது. ''சுவாமி! சோழ நாட்டில் இன்னும் மாறுதல் என்ன நிகழப் போகிறது? இப்போதே சோழப் பரம்பரை மாறி வேறு ஒருவரிடம்தானே செல்ல இருக்கிறது. இன்னும் மாறுதல் உண்டா....?'' என்று கேட்டான்.

கேசவ சுவாமி மெல்ல நகைத்தார். ''இப்போது சோழ பரம்பரை எங்கே மாறியிருக்கிறது? எதைக் கொண்டு அவ்வாறு கூறுகிறாய்?'' என்று கூறிவிட்டு, ''எல்லாம் கண்ணன் திருவிளையாடல். அவன் சித்தம் எப்படியோ, அப்படித்தான் எல்லாம் நடக்கும். வல்லபனின் பட்டாபிஷேகம் முடிந்தவுடன் நாம் புறப்படுகிறோம்'' என்றார்.

''இந்தப் பாலகனையும் எடுத்துக் கொண்டா?'' என்று சீடன் கேட்டான்.

''ஆமாம்; குழந்தை நம் கூட்டத்தில் ஒருவன். தாயும், தந்தையும் நாம் தான். இறைவனின் குழந்தை இந்தப் பாலகன். அவனது செவிகளில் எப்போதும் இறைவன் திருநாமமே கேட்க வேண்டும். அவன் பெரிய அறிஞனாக வளர வேண்டும்...'' என்று கூறினார்.

கேசவ சுவாமி அந்தப் பாலகனைத் தம் இரு கரங்களாலும் தூக்கி எடுத்து அணைத்து, உச்சி முகர்ந்து, ஆரத் தழுவி, முத்தம் பொழிந்து, கொஞ்சிக் குலவி வெளியே கொணர்ந்து உட்கார வைத்தார். பாலகன் தன் பிஞ்சுக்கரம் கொட்டி நகைத்தான். எதிரே இருந்த சிறு தேரை உருட்டினான். யானை, ரிஷபம், மான், மயில் போன்று மண்ணால் செய்யப்பட்ட உருவங்களைக் கரங்களால் தூக்கியும், கீழே வீசியும் கலகலவென்று சிரித்தான்.

கேசவசுவாமி பாலகனின் பால்வடியும் வதனத்தையே நோக்கியவாறு இருந்தார். அவர் ஏனோ பெருமூச்சு விட்டார்.

அப்போது யாரோ வந்து நிற்கும் அரவமும், மெல்ல விசும்பும் ஓசையும் கேட்டன. சுவாமி திரும்பி நோக்கினார். பரபரப்புடன் எழுந்தார்.

''அரசே, வரவேண்டும் வரவேண்டும்'' என்று வரவேற்றார். சீடர்களை அழைத்து இருக்கை கொண்டு வரச் சொன்னார்.

சோழ மன்னர் ராஜராஜன் கேசவ சுவாமியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று ''சுவாமி, தங்களுக்குத் தெரிவிக்காமல் வந்து விட்டேன். மன்னிக்க வேண்டும்'' என்றார்.

'நீடுவாழ்க' என்று ஆசிகூறிய கேசவசுவாமி மேலும் தொடர்ந்தார்.

''மன்னவா, இங்கே வருவதற்கு முன் அறிவிப்பு வேண்டுமா? நானே புறப்பட்டுப் பழையாறைக்கு வர நானே எண்ணியிருந்தேன். ஆனால்...'' என்று சுவாமி கூறி நிறுத்தினார்.

மன்னர் விழிகளில் நீர் ததும்பி நின்றது. உதடுகள் என்ன — உடலே மெல்லத் துடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. கேசவசுவாமி வாயிலை நோக்கினார். மன்னருடன் பரிவா



ங்கள் காணவில்லை; பவனி புறப்படும்போது அணியும் ஆடை ஆபரண மகுட இத்யாதிகளை மன்னர் அணியவில்லை. உடைவாளும் இல்லை.

''சுவாமி! என்னுடன் மெய்க் காவலர் யாரும் வரவில்லை. நான் இங்கே வருவது ஒருவருக்கும் தெரியாது. இரவெல்லாம் உறக்கமில்லை. பொழுது புலருவதற்காகக் காத்திருந்தேன். நேற்றெல்லாம் மனத்திலே பலவிதப் போராட்டங்கள்; குழப்பங்கள். நாம் திட்டமிட்டபடி இளவரசுப் பட்டாபிஷேக விழா நடைபெறுமா என்ற சந்தேகம் எனக்கு எழுந்து விட்டது. வல்லபன் தன் திருமணத்தைக் குறித்துத் தனக்கென்று ஓர் எண்ணம் கொண்டிருக்கிறான்....'' என்று கூறிச் சற்றுப் பேச்சை நிறுத்தித் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்டார் அரசர்.

கேசவசுவாமி ஏதும் பேசாது மௌனமாக இருந்தார். குழந்தை விளையாடிக் கொண்டிருந்தது. மண்ணால் ஆன தேரை இழுத்தது. தேர் வந்த வேகத்தில் கவிழ்ந்தது. குழந்தை கைகொட்டிச் சிரித்தது.

சோழ மன்னர் குழந்தையைப் பார்த்தார். அவரது செல்வன். சோழநாட்டின் வாரிசு, மாளிகையில் தாதியர் மடியில் கம்பீரமாக இருந்து தங்கத்தால் ஆன பதுமைகளுடன் விளையாடிக்கொண்டிருக்க வேண்டிய பாலகன், குடிலின் புழுதியில் மண் பொம்மையுடன் விளையாடுகிறான். நறுமணத்தைலம் தடவி வாரி விடப்பட வேண்டிய அவன் கூந்தல் சரிவர எண்ணெய் காணாமல் பழுப்பு நிறம் பரவியிருக்கிறது.

திருச்சிற்றம்பலமுடையார் நம்பி பல்லவரையர் மார்த்தாண்ட நாயகர். அவரது சேவைக்காக அவரை முதல் அமைச்சர் ஆக்கினேன். எல்லாவற்றிற்கும் மேலாக அவர் என் உயிர் நண்பர். குழந்தைகளை என் கண்ணில்படாமல் வளர்க்க வேண்டும் என்றால் இப்படி சந்நியாசியிடமா ஒப்படைப்பது? தன் உணவுக்கே பிறர் கையை எதிர்பார்த்து இருக்கும் முனிவரிடம் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஒப்படைக்கலாமா? நாளை இந்த நாட்டை அரசாளப் போகும் அரசகுமாரனை அனாதை போல் வளர்ப்பதா?

''குழந்தாய் என் செல்வமே'' என்று ஓடிச் சென்று வாரியணைத்து முத்த மாரி பொழிந்து, குழந்தை திக்பிரமையுடன் கதறும் வரையில் அழுத்தமாக முகத்துடன் அணைத்துக்கொண்ட ராஜராஜர், ''மகனே! உன்னைப் பிரிந்திருக்க என்னால் முடியாதடா, வானத்துச் சூரியனே! குலம் விளங்க வந்த சோதிவா பூங்கொத்தே'' என்று பலவாறாகக் கூறி, தம் ஆசையைப் பாசத்தை வெளியிட்டார். பலவந்தமாக வெளியிட்ட ஆசையால் அதிர்ச்சியுற்ற குழந்தை கதறி அழுதது.

''ஏ, ராஜன்! இப்படித் தனி வாரும்! என்ன காரியம் செய்து விட்டீர்?'' என்று கேசவசுவாமி கர்ஜித்து, குழந்தையை அவரது அணைப்பினின்று பறித்துப் பிரித்து, சீடனை அழைத்து, ''குழந்தையை உள்ளே கொண்டு போ'' என்று கூறினார்.

திகைத்து நின்ற அரசரைப் பார்த்து, ''மன்னவா, நீர் செய்தது சரியென்று உமக்குப் பட்டதா?'' என்று சீற்றத்துடன் கேட்டார்.

கேசவ சுவாமியை நோக்கித் திக்பிரமையுடன் நின்ற ராஜராஜன், தழுதழுத்த குரலில், ''நான் என்ன பிழை செய்து விட்டேன் சுவாமி?'' என்று கேட்டார்.

''நீங்கள் இங்கு வந்தது தவறு.''

''இரவு முழுவதும் தூங்காமலிருந்த என் உள்ளத்தில் ஏற்பட்ட பீதியை, வேதனையைக் கூற வந்தேன்.''

''குழந்தையைக் காண வரவில்லையா?''



காளிச்சரண், விஸ்வநாத் என்ற பெயரில் வந்த இரண்டு ஹிந்திப் படங்கள் பெரும் வெற்றியடைந்தன. இப்போது 'கபில் தேவ்' என்ற பெயரில் ஒரு ஹிந்திப்படம் வரப் போகிறதாம்! — ''ஹீரோ''

''குழந்தை இங்கு வளருகிறான் என்பதே என் நினைவிலில்லை.''

''நினைவை விட்டு அகன்றிருக்கும் ஒரு நிகழ்ச்சி இடையென்று எவ்வாறு நினைவுக்கு வந்தது?''

''இங்கு வந்தேன். பிள்ளைப் பாசம் என் மதியைக் கட்டி விட்டது.''

''இதன் விளைவு உமக்குத் தெரியுமா?'' கேசவசுவாமி இப்படி கடுமையான குரலில் கேட்கவும் சொல்வதறியாது திகைத்து நின்றிருந்த அரசரை நோக்கி, ''சோழ நாட்டு மாமன்னரே! என் மீது உமக்கு நம்பிக்கை உண்டா?'' என்று கேட்டார்.

''ஆகா; என்ன கேள்வி கேட்டு விட்டீர்கள்? தாங்கள் என் குரு. எங்கள் குல குரு. இந்த நாட்டின் குரு. நம்பிக்கை இருக்கிறதா என்று கேட்ட கேள்வியே என்னைச் சுட்டுக் கொல்கிறது'' என்று பயபக்தியுடன் கூறினார்.

''நான் கூறியது நினைவிருக்கின்றதா? இந்தக் குழந்தைகள் இந்த சந்நியாசியின் வீட்டிலும், மற்றொரு கவியரசர் வீட்டிலும் வளர்வதற்குக் காரணம் தெரியுமா?'' என்று கேசவசுவாமி கற்றிவளைக்காமல் கேட்டார். மன்னரின் உடல் சிலிர்த்தது. மெல்ல நடுங்கியது. ''குழந்தைகளை நான் பார்க்கவே கூடாது என்று கட்டளையிட்டிருந்தீர்கள்'' என்றார் மன்னர்.

''எப்பொழுதுமே தங்கள் அருகில் மாளிகை சுகங்களுடன் வளர வேண்டிய குழந்தைகளை ஏன் நான் பிரித்தேன்? உங்களுடைய நன்மைக்காகத்தான், மன்னரே, உம்முடைய நன்மைக்காகத்தான்!''

ராஜராஜன் உடல் நடுங்கியது.

''நீங்கள் இன்னும் சிறிது காலம் வாழ வேண்டும் என்பதற்காகத்தான். குழந்தைகளுக்குப் பல ஆண்டுகள் வரை கிரக பலன் சரியில்லை. இந்த மூத்த குழந்தையைவிட இளைய குழந்தைக்குப் பலன் சரியில்லை...'' — கேசவசுவாமியின் விழிகள் மூடியிருந்தன.

''நல்ல வேளை, இளையவனை நீங்கள் பார்க்கப் போகவில்லை...''

''இங்கே வந்து பார்த்துப் பிறகு, கவிஞர் வீட்டிற்கும் செல்ல எண்ணினேன்.''

''அரசே, இப்படியே திரும்பிச் செல்லுங்கள். அடுத்த திங்கட் கிழமை வல்லபனுக்கு மண்டை கவிழ்த்து விட வேண்டும்... உடனே ஆக வேண்டும்... புறப்பட்டுச் செல்லுங்கள்....'' சுவாமியின் பேச்சு கட்டளையைப் போலிருந்தது.

மேல் உத்தரீயத்தினால் கண்களைத் துடைத்துக் கொண்ட சோழ மன்னன், நெஞ்சு தழுதழுக்க, ''சுவாமி! பட்டாபிஷேகம் நடைபெறாது போல் தோன்றுகிறதே! அதைக் கூறத் தானே ஓடோடி வந்தேன்'' என்றார்.

''எல்லாம் நடக்கும்...''

''பெருமான் நம்பி, பழையாறையை விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டார்; அவருக்கு என் மேல் கோபம்தான்! மகளை வல்லபனுக்கு மணம் புரிவிக்கவில்லையாம்'' என்றார் அரசர்.

''யார் யாரை மணக்கப் போகிறார்கள் என்ற முடிச்சு அதோ, அங்கே கண்ணபிரானால் போடப்பட்டிருக்கிறது.... நீங்கள் உடனே பழையாறைக்குச் செல்லுங்கள். நம்பியை உடனே அழைத்து வர வேதவனமுடையாரை அனுப்புங்கள்'' என்றார்.

''சுவாமி, வல்லபன் எண்ணம் வேறாக இருக்கிறதே...'' என்றார் அரசர்.

''நாம் இங்கே பேசி எல்லாவற்றையும் முடிவு செய்துவிட முடியாது. நீங்கள் குழந்தையைப் பார்த்ததே பெரிய தவறு. உடனே புறப்படுங்கள். வல்லபனுக்கு மகுடாபிஷேகம் செய்விக்க ஏற்பாடு செய்யுங்கள்..'' என்று கூறிய கேசவசுவாமி, ஏதோ சொல்லக் கூடாததைக் கூறிவிட்டது போல் 'கிருஷ்ணா; கிருஷ்ணா' என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.

குதிரை விரைந்து சென்று கொண்டிருந்ததே தவிர, ராஜராஜனுக்குக் குழந்தையின் நினைவுதான். 'குழந்தைகளைப் பழையாறை மாளிகைக்கே திரும்பவும் வரவழைத்து விட்டால் என்ன... எனக்குத்தானே ஆகாது... ஆகாமல் போகட்டும். ஆனால் குழந்தைகள் சுகமாக வளருமல்லவா?' என்ற எண்ணத்துடன் அரண்மனையை அடைந்தார்.

அங்கே அவருக்குக் காத்திருந்த செய்தி அதிர்ச்சி தரக்கூடியதாயிருந்தது. வல்லபன் இளவரசர்ப் பொறுப்பை ஏற்காமல் தியாகம் செய்துவிட்டுப் புறப்பட்டுப் போய் விட்டான் என்பதே அச் செய்தி.

(அடுத்த இதழில் முடியும்)

---

''நீங்க படம் எடுப்பதற்கு ஒரு மூலக்கதை கேட்டீங்களே, சொல்லட்டுமா?''

''சொல்லுங்க பார்க்கலாம்!''

''ஹீரோ பேர் ஆதிமூலம். அவன் ஸ்டார் மூலம், அவன் நண்பன் மூலம் அவனுக்கு ஒரு வேலை கிடைக்குது. ஆனால் மூல நோயினால் அவதிக்குள்ளாகி... நிர்மூலமா போயி...

''... சார் ... சார்... என்ன சார் மயக்கம் போட்டீங்க!''

- பூண்டி



# தியானமும் காரியமும்

அருள் வாக்கு



ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

**ப**கவானுடைய தியானத்திலேயே நாம் மனஸை நிறுத்த வேண்டும் என்று பார்த்தால் முடிய மாட்டேன் என்கிறது. ஏதோ கொஞ்சம் நாழி, ஒரு க்ஷணம் இரண்டு க்ஷணம் தியானத்தில் நின்றுவிட்டு, அப்புறம் எப்படியோ நம்மை ஏமாற்றி விட்டு எங்கெங்கேயோ இந்த மனஸ் ஓடிவிடுகிறது. நமக்கே அவமானமாகவும் ஆத்திரமாகவும் வருகிறது. ''எப்போது இது இப்படிக் கட்டை அறுத்துக் கொண்டு ஓடிற்று?'' என்று. மனஸின் நேச்சரே (ஸ்வபாவமே) சலனம்தான். அதனால் என்ன பாடு பட்டாலும் அது திமிறிக்கொண்டு எங்கேயாவது ஓடிக் கொண்டேதான் இருக்கிறது. ஸமுத்திரத்தை அலை அடிக்கக் கூடாது என்று சொல்கிற மாதிரிதான் மனஸைக் கட்டுப்பட்டிருக்கச் சொல்வதும் என்று தோன்றி, 'போதும் இந்த யத்னம்' என்று அலுப்புக் கூட வந்து விடுகிறது. ஆனாலும் பகவானே (கீதையில்) ஸ்தித ப்ரக்ஞன் என்பதாக அறிவை ஒரே நிலையில் நிறுத்தியவனைப் பற்றி நிறையச் சொல்லி, 'அவன் நிறைந்த ஸமுத்திரம் மாதிரி, அலையில்லாமல் அசையாமல் இருக்கிறான். அப்போதுதான் ஆசைகளால் ஏற்படுகிற கஷ்டங்கள் இல்லாமல் பரிபூரணமாக, பரமசாந்தமாக, இருக்க முடியும்' என்று சொல்லியிருக்கிறார். நமக்கும் தெரிகிறது. இந்த மனஸின் சேஷ்டை எதுவுமில்லாத நித்திரையின் ஸுகத்துக்கும் சாந்திக்கும் ஸமமாக எதுவும் இல்லை என்று. விழிப்பு நிலையிலேயே நல்ல உணர்வோடு கூடவே அப்படிப்பட்ட மனஸில்லாத பிரசாந்த ஸ்திதியை அடைவதற்குத்தான் தியானம் வழி என்று சாஸ்திரம் சொல்கிறது. ஆனாலும் முதலில் சொன்ன மாதிரி இப்படி தியானம் என்று உட்கார்ந்து கொண்டாலோ, மனசு அப்போதுதான் பழிவாங்குகிற மாதிரி எங்கெங்கோ ஓட ஆரம்பிக்கிறது.

''இப்படி மனஸ் ஓடுகிறதே! இதை அடக்க வழி என்ன?'' என்று அர்ஜுனன் கேட்டபோது பகவான், ''அதுதான் அதன் நேச்சர். ஆனாலும் அப்பியாஸத்தால், ஓடுகிற மனத்தைத் திரும்ப இழுத்துக் கொண்டேயிருந்தால், அப்புறம் ஒரு நாள் அதன் இழுப்புக்கு நீ ஓடாமல் உன் இழுப்புக்கு அது கட்டுப்பட ஆரம்பிக்கும். முயற்சியை விடாமல், நம்பிக்கை இழக்காமல், அலுத்துக் கொள்ளாமல் திரும்பத் திரும்ப மனஸை அடக்குவதற்கு அப்பியாஸம் பண்ணிக் கொண்டே இருக்க வேண்டியதுதான்'' என்று சொல்லி விட்டார்.

ஆரம்ப ஸ்திதியில் வெறும் தியானம் என்று மட்டும் (காரியமில்லாமல்) செய்யும் போது சலித்துத்தான் போகும். அதனால்தான் பூஜை, ஆலய தரிசனம், க்ஷேத்ராடனம், தீர்த்தாடனம் என்றெல்லாமும் வைத்திருக்கிறது. இதெல்லாம் ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு கண்ணை மூடிக் கொண்டு பண்ணுகிற விஷயமல்ல, இவை காரியங்களாக இருக்கின்றன. நேரே மனஸை அடக்குவதைவிட பகவத்பரமான இப்படிப்பட்ட காரியங்களோடு மனஸைச் சேர்த்து விட்டால், காரியம் பண்ணிப் பண்ணியே பழக்கமான நமக்குக் கொஞ்சத்தில் கொஞ்சம் இவற்றின் மூலம் பகவத் அநுபவம் ஏற்படுகிறது. இவற்றோடு காரியமேயில்லாத தியானத்தையும் அப்பியஸிக்க வேண்டும். பக்குவமாக ஆக காரியலோகப் பிணைப்பு குறைந்து, காரியமில்லாமல் பகவத் சிந்தனை பண்ணுகிற யோக்கியதை வரும்.

---




பெங்களூர் ஸினிமாக் கொட்டகைகளில் ஸைக்கிள், ஸ்கூட்டர்கள் நிறுத்தினால் டோக்கன் கொடுப்பார்கள். ஆனால் கட்டணம் கிடையாது!

★

பெங்களூர் ஸினிமாத் தியேட்டர்களில் "ஏ" முத்திரைப் படங்கள் திரையிடப் படும்போது டிக்கெட்டின் மேல் இருமடங்கு வரி விதிக்கிறது கர்நாடக அரசு! — யெ

இவ்விதழ் மேலட்டைப் படம் :

**ஜாய் டாய் – கல்கி குழந்தைகளுக்கான போட்டியில் முதல் பரிசு பெற்ற சிறுமி காமாட்சி தீட்டிய வண்ண ஓவியம்.**

மந்திரங்களை ஜபிப்பதின் மூலம் பரமாத்மாவைத் தியானிப்பதும் ஒரு வழி. ஒரு மந்திரத்தை இத்தனை ஆவிருத்தி ஜபிப்பது என்று வைத்துக் கொள்வதால் மந்திர சப்தம், அது சொல்கிற மூர்த்தியின் ஸ்வரூபம், குணம், இதிலெல்லாம் மனஸ் நிலைக்க வழியுண்டாகிறது. ஆனாலும் இதன்போதும் மனசு எப்படியோ கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு எங்கேயாவது ஓடிக்கொண்டேதான் இருக்கும். திரும்பத் திரும்ப அதை இழுத்துத் தானாக வேண்டும். அப்பியாஸத்தைத் தவிர மனசை அடக்க உபாயமில்லை.

தண்டால் போடுவதைத் தேகாப்பியாஸம் என்கிறோம். ஒரு தரம் தண்டால் போட்டால் ஆரோக்கியம் வந்து விடுமா என்ன? திரும்பத் திரும்பப் போட வேண்டும், தினம் தினம் போட வேண்டும். அதுதான் அப்பியாஸம். மனஸையும் இப்படித்தான் தளராமல் நம் லட்சியத்துக்கு இழுத்துக் கொண்டேயிருக்க வேண்டும்.

மனஸைக் கட்டுப்பாட்டில் கொண்டு வருவதற்குப் பக்கபலமாக இருப்பது ஸத்காரியங்களை நிறைய இழுத்துப் போட்டுக் கொள்வதுதான். இவற்றில் ஈடுபட்டிருக்கும் வரை மனஸ் காரியத்திலேயே தான் இருக்கும்; அன்று பின்று என்று ஓடாது.

சிரத்தாநந்தா என்று ஆர்ய ஸமாஜத்தில் முக்யஸ்தராக ஒருத்தர் இருந்தார். அவரைப் பத்திரிகைக்காரர்கள் (நிருபர்கள்) பேட்டி கண்டார்கள். நம் நவநாகரிக உலகத்தில் இப்படிப் பத்திரிகைகள் என்று ஏற்பட்டு, சுதந்திரச் சிந்தனை, அது, இது என்று சொல்லிக் கொண்டு யாரை வேண்டுமானாலும், யார் வேண்டுமானாலும், எது வேண்டுமானாலும் கேட்கலாம் என்று ஏற்பட்டிருக்கிறதல்லவா? இதன்படி அந்த வயஸான ஸாதுவிடம் பத்திரிகையாளர்கள், ''உங்களுக்குக் காமம் ஏற்படுகிறதா?'' என்று கேட்டார்கள். இப்படிக் கேட்டதில் அவருக்குக் கோபமே வரவில்லை. (காம, குரோதம் என்பார்கள். காமத்தைப் பற்றிக் கேட்டதிலேயே குரோதம் வர இடமிருந்தும் அவருக்கு வராதது விசேஷம்)! அவர் அதற்கு இப்படிப் பதில் சொன்னாராம்: 'காமன் என் ரூமுக்குள் வரவேண்டும் என்றுதான் பார்க்கிறான். ஆனால் அங்கே எப்போது பார்த்தாலும் காரியங்கள் என்கிற ஸமூகம் சூழ்ந்து கொண்டிருப்பதால் அவனுக்குப் பிரவேசிக்க இடமேயில்லாமல் திரும்பி விடுகிறான்.''

ஹிந்தியில் ''காம்'' என்றால் காமம், கர்மம் இரண்டையும் குறிக்கும். இவர் மனஸில் (ரூமில்) எப்போது பார்த்தாலும் ''காம்'' (ஸத் காரியங்கள்) நிரம்பியிருந்ததால், அந்த இன்னொரு ''காம்'' (காமம்) அதில் பிரவேசிக்க முடியவில்லையாம்!

# இப்படியே போனால்...

''**சா**திகள் இல்லையடி பாப்பா'' – என்பதற்கு ஏற்பத் தெருப் பெயர்களில் உள்ள சாதிப் பெயரை நீக்க ஆரம்பித்திருப்பது பாராட்டத் தக்கதே. ஆனால் அபத்தமான நிலைக்கு இது போகக்கூடாது. நுங்கம்பாக்கம் 'கிருஷ்ணமாச்சாரி ரோடு' 'கிருஷ்ணன் ரோடு' என்று மாறினால் சரித்திரமே மாறி விடும்.

எந்தப் புதுமையையும், பழமையைச் சிதைக்கப் பயன்படுத்துவது நல்லதல்ல; நாகரிகமல்ல.

கீழே கொடுத்த 'பாரா'வைப் படியுங்கள். கோடிட்ட இடங்கள் ஜாதிப் பெயரானதால் நீக்கப்பட்டு விட்டன. புரிகிறதா பாருங்கள்.

ராமு, சீனு, கிட்டு, முனுசாமி ———— யோர் ————யார் கோவிலுக்குப் போய் விட்டு, ————நாடு ஹோட்டலில் டிபன் சாப்பிட்டு விட்டு ———— ஹாலில் தங்கள் மனைவிகளுக்காகச் சில பொருள்களை வாங்கிக் கொண்டு ———— ஹாலில் நடந்த மீட்டிங் பற்றிப் பேசிக் கொண்டனர்.

கோடிட்ட இடங்களில் முதலி, பிள்ளை, செட்டி, நாயுடு, தேவர் என்பவைகளைப் பொருத்திப் படித்துப் பார்க்க.

திருமலை நாயக்கர் மஹால் போன்ற சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களின் பெயர்களையும் மாற்றுவார்களா? தமிழுக்கு உயிரளித்த உ. வே. சாமிநாத அய்யர், அவருடைய ஆசிரியர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இவர்கள் இருவரைப் பற்றிய புத்தகங்களில் 'ஐயரவர்கள்' 'பிள்ளையவர்கள்' என்றுதான் மரியாதையாகக் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றையெல்லாம் மாற்றுவதா?

ஏன் முதல் தமிழ் நாவலான 'பிரதாப முதலியார் சரித்திரம்' தடைசெய்யப்படுமா?

இப்படியே போனால் சாதி ஒழிகிறதோ இல்லையோ – சரித்திரம் ஒழிவது நிச்சயம்!

**– ஆடிச் சதயன்**



# தயவு செய்து சிரியுங்கள்!

ஒருவன்: என் கைகள் மட்டும் கட்டப் படாமலிருந்திருந்தால் என் எதிரியைத் தொலைத் திருப்பேன்.
மற்றவன்: உன் கைகளைக் கட்டியது யார்?
முதல்வன்: என் எதிரிதான்!

● ● ●

''யாராவது சத்தம் போட்டா வெளியே அனுப்பிடுவேன்'' என்றார் ஆசிரியர்.
''ஓ'' என்று கத்தினான் ஒரு மாணவன்!
— புரொபஸர்

● ● ●

''உங்கப்பா வலதுசாரியா இடதுசாரியா?''
''இரண்டுமில்லை வேங்கடாசாரி''

● ● ●

பையன்: நமஸ்காரம் பண்ணறேன், பாட்டி!
பாட்டி: மகாராஜாவா வரணும்.
பையன்: அது வாணாம். பாரதி ராஜா அல்லது இளையராஜா மாதிரி வரணும்னு ஆசீர்வாதம் பண்ணுங்கோ!
—எஸ்.சந்திரசேகர்

● ● ●

கணவன்: தியேட்டர் மானேஜர் ஃபாமிலி ஓசி பாஸ் அனுப்பியிருக்கார்.
மனைவி: போய்ப் பார்க்க ஒரு டூரிஸ்ட் பஸ் அரேன்ஜ் பண்ணுங்கள்.

● ● ●

சிறுவன்: குட்மார்னிங் சார்!
பெரியவர்: யாரப்பா நீ? என்ன வேணும் உனக்கு?
சிறுவன்: பதிலுக்கு ஒரு குட்மார்னிங்!
—கோ. வி. பரஞ்சோதி

● ● ●

''பொண்ணுக்கு புரோக்கர் மூலமா ரெண்டு வருஷம் மாப்பிள்ளை பார்த்து அலுத் சேன். கடைசியா இப்பத்தான் ஒரு வழியா மாப்பிள்ளை அமைஞ்சது....''
''மாப்பிள்ளை யாரு?''
''வேறெ யாரு? அதே புரோக்கரேதான்!''

● ● ●

''ரூமுக்குள்ளே கட்சி உறுப்பினர்களெல்லாம் ஏதோ கோபமா சத்தம் போடறாங் களே. என்ன விஷயம்?''
''கட்சிக்குள்ளே ஏகோபித்த அபிப்பிரா யத்தை உருவாக்குறாங்களாம்!''
—முத்து. தங்க. ஐயப்பன்

● ● ●

பேச்சாளர்: நம்முடைய தலைவர் கட்டத் தொடங்கிய வீட்டினைக் கட்டி முடிக்க அன் பர்கள் தங்களால் இயன்ற அளவு அவர் பிறந்த நாள் விழா வான இதிலே அவர் எடைக்கு எடை சிமெண்ட் தந்து உதவும்படி வேண்டுகோள் விடுக் கிறேன்.

● ● ●

நண்பர்: நீங்க ஏன் டூயட் சீனை மட்டும் எப்பவும் கடைசி யாகவே எடுக்கறீங்க?
தயாரிப்பாளர்: முதலிலேயே அதை எடுத்து முடிச்சா ஹீரோ ஹீரோயினை மாத்துன்னு கேட்க ஆரம்பிச்சுடறார். —கே. ஆர். எம்.

● ● ●

''உங்க தாத்தா தூங்கும்போது இப்படி சத்தம் போட்டுக் குறட்டை விடறாரே!''
''அவர் இப்போ ''Sound Sleep''லே இருக்கார்.'' —வெ. சீதாராமன்

● ● ●

ஒருவர்: இந்தக் காலேஜில் ஏன் எல்லா கிளாஸ் ரூம் கதவிலும் 'நோ அட்மிஷன்' என்று எழுதியிருக்கிறது?
பிரின்சிபால்: அந்த உத்தரவை மீறவேண் டும் என்ற காரணத்தினாலாவது யாராவது மாணவன் உள்ளே நுழையட்டுமே என்ற நப்பாசைதான்!'' —எஸ். பத்மாவதி



''இவனை நாம் கல்லூரிக்குள் ராகிங் செய்ய முடியாது போலிருக்கே?''

## கந்தன் கருணை!



மூன்றாண்டுகளுக்கு முன் எங்கள் பள்ளியில் என் பொறுப்பில் சுமார் 65 மாணவர்களும் 20 ஆசிரியர்களும் கோவை, ஊட்டி, மைசூர், பெங்களூர் போன்ற இடங்களுக்கு உல்லாசப் பயணம் புறப்பட்டோம். திட்டமிட்டபடி முன் கூட்டியே பழனி அடைய முடியாததால், மலைமீது ஏறி முருகனைத் தரிசனம் செய்ய முடியாமல் அடிவாரத்திலேயே சாமி கும்பிட்டு விட்டு பிரயாணத்தைத் தொடர்ந்தோம். அப்பவே பழனி முருகன் நம்மை எங்கோ சோதிக்கப் போகிறான் என்று உள்ளுணர்வு கூறியது. மைசூர் பிருந்தாவனத்தில் எங்கள் பஸ் நுழையும் போது, எங்கள் பஸ்ஸை நிறுத்திய ஒரு போலீஸ்காரர், டிரைவரிடம் மாணவர்களைப் பிருந்தாவனத்தில் இறக்கி விட்டுவிட்டு, போலீஸ் ஸ்டேஷனுக்கு வண்டியோடு, வண்டிக்குப் பொறுப்பான ஆசிரியருடன் வரச் சொன்னார். போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்த நாங்கள், அவர்களிடம் விவரம் கேட்டபோது, பிருந்தாவனம் பகுதியில் அன்னிய மாநில பஸ்ஸான எங்கள் பஸ் நுழையத் தகுந்த அனுமதி பெறவில்லையென்றும், அந்தக் குற்றத்திற்காக வண்டியை நிறுத்தியுள்ளோம் என்றும் கூறினார்கள். பெரிய இன்ஸ்பெக்டரைப் பார்த்துச் சமாதானங்கள் கூறலாம் என்றால் அவரோ இரவு 10 மணிக்குத்தான் கிடைத்தார். இதற்கிடையே மாணவர்கள் குளிரால் நடுநடுங்கிக் கொண்டிருந்தனர். நாங்கள் சொல்வது எதையும் காதில் வாங்கிக் கொள்ளாத அந்தப் போலீஸ் அதிகாரி, மாணவர்களை விடுதியில் கொண்டுவிட்டு பஸ்ஸுடன் மறுநாள் காலை ஏழு மணிக்கு அவரை வந்து பார்க்கும்படி அனுமதி கொடுத்து, டிரைவரின் லைசென்ஸைப் பறித்து வைத்துக் கொண்டார்.

நாங்கள் மாணவர்களை அழைத்துக் கொண்டு விடுதிக்குச் சென்று, மேற்கொண்டு செய்ய வேண்டியது பற்றி யோசித்தோம். வேண்டியவர்கள் பலருக்கு மைசூரில் போன் செய்து வரவழைத்து, அவர்கள் மூலம் அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு வேண்டிய ஒரு என்ஜினீயரைச் சந்தித்து, நிலைமையை விளக்கி மறுநாள், வண்டியை ரிலீஸ் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தோம். அவரும் மனமிரங்கி எங்கள் பஸ்ஸைப் போக அனுமதித்தார். பின் ஆண்டவனுக்கு நன்றி கூறிவிட்டு எங்கள் பிரயாணத்தை மேலே தொடர்ந்தோம். பெங்களூரை விட்டுத் திரும்பும் வழியில் எங்கள் பஸ் இரவு உணவுக்காக கிருஷ்ணகிரியில் ஒரு உணவு விடுதிமுன் நிறுத்தப்பட்டது. மாணவர்களும் ஆசிரியர்களும் உணவருந்தி விட்டு, மாணவர்களை எண்ணாமல் பஸ்ஸைக் கிளப்பி விட்டோம். சுமார் ஆறு மைல் சென்ற பிறகு ஒரு சிறுவன் வண்டியில் இல்லாதது கண்டு பிடிக்கப்பட்டது. உடனே எனக்கு மயக்கமே வந்து விடும்போல் இருந்தது. என் மனத்தில் ஒரு பொறி தட்டியது. எங்கள் பஸ்ஸைப் போலவே மற்றொரு பஸ் கிருஷ்ணகிரி உணவு விடுதி வாசலில் நின்றிருந்தது ஞாபகம் வந்தது. உடனே வண்டியைக் கிருஷ்ணகிரிக்குத் திருப்பினோம். நல்ல வேளையாக இந்த பஸ் அங்கேயே நின்று கொண்டிருந்தது. வேகமாக ஓடிச் சென்று பார்த்தால் அந்த வண்டியில் ஒரு சீட்டுக்கு அடியில் படுத்து அச்சிறுவன் தூங்கிக் கொண்டிருந்தான். பின் அவனை எழுப்பி எங்கள் பஸ்ஸில் ஏற்றிப் பத்திரமாக ஊர் வந்து சேர்ந்தோம். அவசரப்பட்டு, முருகனை மலை ஏறித் தரிசனம் செய்யாமல் வந்ததற்கு எங்களைச் சரியானபடி சோதித்தும் பின் அவரே காப்பாற்றித் திரும்பவும் பத்திரமாக எங்களை ஊர் கொண்டு வந்து சேர்த்தார். அக்கருணையை என்றும் மறக்க முடியாது.

—பி. நாராயணன்.







# கல்கி-ஜாய்டாய் குழந்தைகளுக்கான போட்டி முடிவு

**வா**ரா வாரம் வீட்டுக்குக் கல்கி பத்திரிகை வந்ததும் ஆவலும் தவிப்புமாக–பரபரப்புடன் பக்கங்களைப் புரட்டி – கல்கி ஜாய்டாய் இணைந்து நடத்திய குழந்தைகளுக்கான போட்டி முடிவைத் தேடிக் கொண்டிருந்தீர்கள் இல்லையா? பள்ளி இறுதிப் பரீட்சை முடிவை விட இந்தப் பரிசுப் போட்டியின் முடிவை அறிந்து கொள்ள நீங்கள் எத்தனை ஆர்வத்துடன் காத்திருந்தீர்கள் என்பதும் எங்களுக்குத் தெரியும். ஆனால் போட்டியில் கலந்து கொண்ட குழந்தைகளின் திறமையை எடை போடுவதென்பது எங்களுக்கு அத்தனை சுலபமான காரியமாக இல்லை. இந்தப் போட்டியில் குழந்தைகள் காட்டிய ஆர்வமோ, அபாரமானது. கதை எழுத ஒருவர் அதற்குப் படம் போட ஒருவர் என்று ஜோடி சேர்ந்து அனுப்பிய கதைகளும் படங்களும் வந்து கல்கி காரியாலயத்தில் மலைபோலக் குவிந்து கிடந்தன. அத்தனையையும் தரம் பிரித்துத் தகுதியை நிர்ணயிப்பதென்பது-அடேயப்பா!

பிரபல ஓவியர்களான ஜெயராஜும், வினுவும், கோபுலுவும், கல்பனவும், வர்ணமும், மாருதியும், ராமுவும், நடனமும் படம் போடுவது பிரமாதமல்ல. இவர்களின் படங்களில் காணாத புதுமையும் 'த்ரில்'லும் பிஞ்சுக் கரங்கள் கற்பனையோடு தீட்டியிருந்த அத்தனை படங்களையும் கண்டபோது எங்களுக்கு ஏற்பட்டது. தங்கள் கூட்டாளி எழுதிய கதையின் கருத்தைப் படங்களில் கொண்டுவர, இந்த வருங்கால ஓவியர்கள் தூரிகையும் கையுமாக எப்படி இயங்கி இருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பார்த்து மகிழ்ந்து போனோம். நாக்கைத் துருத்திக் கடித்துக் கொண்டு, காப்பி குடிப்பதையும் பட்சணம் தின்பதையும் விளையாட்டையும் மறந்து தூரிகையும் கையுமாகக் காகிதத்தின் மீது கவிந்து கொண்டு படம் போடும் கோலத்தைக் கற்பனைத் திரையில் கண்டோம். வண்ணங்களைக் குழைத்துக் குழைத்து இப்படியும் அப்படியுமாகப் படத்தைத் திருப்பிப் பூசிச் சரிபார்த்ததையும்,

படங்கள்: ஜாய் டாய் பொம்மைகள் கண்காட்சி அண்மையில் சென்னையில் நடந்தது. ரிப்பன் கத்தரித்துத் திறந்து வைத்ததும் ஒரு குழந்தை தான்!



திருப்தி ஏற்படாத நிலையில் காக்கிச் சுருட்டி வீசிய காகிதக் குவியல்களையும் எண்ணிப் பார்க்கிறோம். பெரியவர்களின் உதவிக் கரம் நீண்ட போதும் 'எப்படி இருந்தாலும்சரி-இது என்னுடையதாகவே இருக்க வேண்டும்' என்று உதவிக் கரத்தை ஒதுக்கி விட்டுத் தாங்களே உருவாக்கியுள்ள உயிர்ச் சித்திரங்களைக் காண்கிறோம் — புளகாங்கிதமடைகிறோம். பூரித்துப் போகிறோம்! பிஞ்சு விரல்கள் தீட்டிய சித்திரம் — குஞ்சுகளின் கற்பனையிலே எழுதிய கதை. ஓ! அதன் மதிப்பே தனிதான்!

போட்டியில் கலந்து கொண்ட அத்தனை செல்வங்களின் உழைப்பும் உற்சாகமும் பாராட்டப் படவேண்டியவைதான். ஆனாலும் பரிசு குறிப்பிட்ட சிலருக்குத் தானே தர முடியும்? இதோ, சர்வதேசக் குழந்தைகள் ஆண்டினையொட்டி கல்வி — ஜாய் டாய் இணைந்து நடத்திய இப்போட்டியில் பரிசு பெற்றவர்கள் விவரம்:

- மாதத்துக்கு ஒருமுறை அங்கத்தினர்களை வைத்திய சோதனை செய்து அவசியமானால் சிகிச்சை அளிக்கவும் ஏற்பாடுகள் செய்யப் படுகிறது.
- குழந்தைகளிடையே நட்பையும் அன்பையும் வளர்க்க உதவுகிறது.
- குழந்தைகளின் திறமையை வெளிப்படுத்த அவ்வப்போது போட்டிகள் நடத்திப் பரிசுகள் தரப்படுகின்றன.
- இம்மாதம் 15ந் தேதியிலிருந்து (ஜூலை) ஹிந்தி வகுப்புகள் தொடங்கப் பட்டுள்ளது.
- ஒவ்வொரு ஆண்டும் நவம்பர் முதல் வாரத்தில் நடைபெறும் குழந்தைகள் அணி வகுப்பில் சங்க அங்கத்தினர்கள் கலந்து கொள்ளலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட குழந்தைகள் அணிவகுப்பின் 'கீபைண'வில்

| | கதை ,கட்டுரை எழுதியவர் | படம் போட்டவர் |
|---|---|---|
| **முதல் பரிசு:** | **எஸ். கல்யாணி** | **எஸ். காமாக்ஷி** |
| | உல்சூர், பெங்களூர் - 560 008 | |
| **இரண்டாம் பரிசு:** | **என். ஆனந்தி** | **என். ஜெய்** |
| | புழுதிவாக்கம், சென்னை - 600091 | |
| **மூன்றும் பரிசு:** | **ஆர். கண்ணன்** | **ஆர். லக்ஷ்மி** |
| | சத்யசாய் நகர், மதுரை - 625003 | |
| **ஆறுதல் பரிசுகள்:** | **1. ஜே. க்ருபா** | **எம். சாமுண்டீஸ்வரி** |
| | பாண்டிச்சேரி - 605001 | |
| | **2. எஸ். ஜெயஸ்ரீ** | **எஸ். அனுராதா** |
| | ரயில்வே காலனி, மதுரை - 10 | |
| | **3. சிலம்புச்செல்வி** | **அருள்மொழி** |
| | தார்னகா, ஹைதராபாத் | |
| | **4. சாய்லக்ஷ்மி** | **சாய் பிரகாஷ்** |
| | திருவனந்தபுரம்-23 கேரளா | |
| | **5. A. ராஜுவேல்** | **A. துரைசெல்வி** |
| | சிவகாசி (மேற்கு) | |

முதல் மூன்று பரிசு பெற்ற கதை - கட்டுரைகள் படங்களுடன் அடுத்து வரும் பக்கங்களில் பிரசுரமாகியுள்ளன. ஆறுதல் பரிசுக்கதை - கட்டுரைகள் ஐந்தும் அடுத்த இதழில்.

பரிசு பெற்ற இந்தக் குழந்தைகளுக்கு எங்கள் பாராட்டுக்கள். உங்கள் தோழர்களின் வெற்றிக்கு நீங்களும் கைதட்டி உங்கள் மகிழ்ச்சியைத் தெரிவியுங்கள்.

இன்னுமொரு சந்தோஷமான சமாசாரம் — ஜாய்டாய் மாமா உங்களுக்கு இதை விசேஷ போனஸாகத் தெரிவிக்கச் சொன்னார். பரிசு பெற்ற இந்தப்பதினாறு (8 × 2 = 16) குழந்தைகளும் ஓராண்டு ஜாய்டாய் குழந்தைகள் சங்கத்தின் கௌரவ அங்கத்தினர்களாக்கப் படுகிறார்கள். சந்தா செலுத்தாமலேயே ஜாய்டாய் சில்ட்ரன்ஸ் கிளப்பின் நடவடிக்கைகளில் இவர்கள் பங்கு பெறலாம்.

'அது சரி இந்தச் சங்கத்தில் அங்கத்தினராவதினால் என்ன பலன்?' என்கிறீர்களா?

- உங்கள் அறிவை வளர்த்துக் கொள்ளவும் நல்லவிதமாகப் பொழுது போக்கவும் நிறையப் புத்தகங்கள் உண்டு — படித்து மகிழ.
- உல்லாசப் பயணங்கள், பிலிம் ஷோ, விளையாட்டுப் போட்டிகள் எல்லாம் உண்டு.

பங்கு பெற அனுமதிக்கப் படுவார்கள். வெற்றி பெற்ற குழந்தைகள் இந்தியாவின் முக்கிய இடங்களுக்கு இலவசமாகச் சுற்றுலா சென்று வரவும் ஒரு வருஷத்துக்கு இலவசக் கல்வி வசதி பெறவும் அகில இந்திய பொம்மை தயாரிப்பாளர் சங்கம் ஏற்பாடு செய்கிறது.

- ஜாய்டாய் பொம்மை வாங்கும் அங்கத்தினர்களுக்கு அதன் விலையில் 20 சதவிகிதம் தள்ளுபடியும் உண்டு. போதுமா? குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கும், முன்னேற்றத்துக்குமான இது போன்ற நவநவமான திட்டங்கள் நிறைய வைத்திருக்கிறார் ஜாய் டாய் மாமா. இது மட்டுமல்ல, விரும்பினால் நீங்கள் எல்லாருமே ஜாய்டாய் கிளப்பின் அங்கத்தினராகலாம் 'ஆண்டுச் சந்தா ரூ 12-தான். போட்டியில் பங்கு பெற்ற, வெற்றி கண்ட குழந்தைகளுக்கு கல்வி ஜாய்டாய் நிறுவனங்கள் தங்கள் மகிழ்ச்சியையும் மனமார்ந்த பாராட்டுக்களையும் மீண்டும் தெரிவித்துக் கொள்கின்றன.

# குப்பனின் வேலைக்காரர்கள்

முதல் பரிசுக் கதை

எஸ். கல்யாணி

குமரப்ப செட்டியாருக்கு ரொம்ப வருடங்கள் மக்கட் செல்வம் இல்லாமல் தவமிருந்து கந்தன், முருகன் என்று குழந்தைகள் பிறந்தன. அவர்களை நாளொரு மேனியும், பொழுதொரு ஆடம்பரமாகவும் வளர்த்து வந்தார்கள். குழந்தைகள் இருவரையும் பள்ளியில் சேர்க்கும் வயது வந்து பள்ளியில் சேர்த்தார்கள். செட்டியாருடைய குழந்தைகள் அல்லவா? அவர்களைக் கவனிக்க ஏராளமான வேலைக் காரர்கள் இருந்தார்கள்.

கந்தனும் முருகனும் கொஞ்சம் பெரியவர்களானதும் அவர்களுக்கும் சிநேகிதர்கள் சேர்ந்தார்கள். நண்பர்கள் ஆவதில் சில நன்மைகள் ஏற்படும். தீமைகளும் ஏற்படுவதுண்டு. குப்பன் என்பவன் இவர்கள் வகுப்பிலேயேபடிக்கும் ஏழை மாணவன். மிக நன்றாகப் படிப்பவன். ஆனால் ஏழைமை காரணமாகக் குப்பனுடன் ஒருவரும் சிநேகம் வைத்துக் கொள்ளவில்லை. குப்பனைச் சீண்டி அவனை அழவிட்டு வேடிக்கை பார்ப்பதில் அவ்வகுப்பு மாணவர்களுக்கு ஒரு வேடிக்கை, விளையாட்டு.

ஒரு நாள் மதியம் சாப்பிட்டு விட்டு எல்லோரும் குப்பனிடம், ''பாவம் குப்பன். காலையில் சாப்பிட்டது தான். அவனுடைய தந்தைக்குப் புத்தகம் வாங்கிக் கொடுக்கக் கூட முடியாது. ஒரே சட்டையைத் தான் போட்டுக் கொண்டு வருகிறான். எங்களுக்கு ஒவ்வொரு வேலை செய்வதற்கும் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். குப்பனுக்குத் தான் ஒருவருமே கிடையாது'' என்று சொல்லிக் கேலி செய்தார்கள். உடனே குப்பனுக்குக் கோபம் வந்து விட்டது. ''எனக்கும் வேலை செய்ய எட்டு வேலைக் காரர்கள் இருக்கிறார்கள்'' என்றான். இதைக் கேட்டு மற்றவர்கள் கொல்லென்று சிரித்தார்கள். குப்பன் பொய் சொல்வதைக் கேட்டு முருகனும் கந்தனும் அவனை அடித்து விட்டனர். இதற்குள் பள்ளிமணி அடிக்கவே எல்லோரும் வகுப்பிற்குச் சென்றனர்.

வகுப்பில் குப்பன் அழுது கொண்டிருப்பதை உபாத்தியாயர் கவனித்து விட்டு அதற்குரிய காரணத்தையும் விசாரித்தார். மாணவர்கள் குப்பன் பொய் சொல்லுவதைக் கூறினார்கள். உபாத்தியாயரும் மாணவர்கள் சொல்வதெல்லாம் உண்மைதானா என்று குப்பனிடம் விசாரித்ததில், குப்பனும் ''நான் சொன்னது உண்மைதான் சார்'' என்றான். உபாத்தியாயருக்கே குப்பன் பொய் சொல்கிறானோ என்று சந்தேகம் வந்து ''குப்பா! எவ்வளவு கஷ்டம் உண்டானாலும் பொய் மட்டும் சொல்லவே கூடாது'' என்றார். உடனே குப்பனும் ''சார் நான் எதற்காகப் பொய் சொல்ல வேண்டும்? நீங்கள் வகுப்பில் நடத்தும் பாடங்களை என் இரு காதுகள் கேட்கின்றன. நான் போகச் சொல்லும் இடங்களுக்கு என் இரு கால்கள் போகின்றன. நான்பார்க்க வேண்டியவற்றை என் இரு கண்கள் பார்க்கின்றன. நான் இடும் பணிகளை என் இரு கைகள் செய்கின்றன. என் வேலைக்காரர்களால் எனக்கு என்றுமே தாமதம் ஆனது கிடையாது!'' என்றான். உபாத்தியாயரே அச்சிறுவனின் கூற்றைக் கேட்டு மெய்சிலிர்த்துப் போனார். குப்பனின் புத்தி கூர்மையைப் பாராட்டி, ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமையை விடுத்துப் படிப்பையும் புத்திக் கூர்மையையும் பாராட்ட வேண்டும் என்று மற்ற மாணவர்களுக்கும் போதித்தார்.

படம் வரைந்தது: எஸ். காமாட்சி









# சாசா நேரு

என். ஆனந்தி

இரண்டாவது பரிசுக் கட்டுரை

படம்
வரைந்தது
என். ஜெய்

1946ஆம் ஆண்டு நவம்பர் 14ந் தேதி. அன்று நேருஜியின் பிறந்த நாள். காந்திஜியிடம் ஆசிபெற பங்கிக் காலனிக்குச் சென்றார் நேரு. அங்கிருந்த குழந்தைகள் அவரைச் சுற்றிக் கொண்டு விட்டன. நேருஜியும் அவர்களுடன் சேர்ந்து விளையாட ஆரம்பித்து விட்டார்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த கவிக்குயில் சரோஜினி தேவி காந்திஜியிடம், ''நமது நேரு பிறந்த தினத்தை ஏன் குழந்தைகள் தினமாகக் கொண்டாடக் கூடாது?'' என்று கேட்டார்.

காந்திஜியும், ''இது மிகவும் பொருத்தமான யோசனை'' என்றார். அன்றே பங்கிக் காலனிக் குழந்தைகள் நேருஜி பிறந்த தினத்தை குழந்தைகள் தினமாகக் கொண்டாடினார்கள். நாம் இன்றும் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம்.

''சூரியன் உள்ள மட்டும் சுதந்திரம் உள்ள மட்டும் பாரினில் நாகரீகப் பண்புகள் வாழும் மட்டும் வாரிதி அலைகள் பாடும் வானிசை உள்ளமட்டும் பாரதத் தலைவன் எங்கள் பண்டிதன் பேரிருக்கும்'' என்று கவிஞர் எஸ். டி. சுந்தரம் பாடியுள்ள பாடல் இன்று உண்மையாகி விட்டது. நேருஜி இந்தியக் குழந்தைகளுக்காக ஏற்படுத்திய ஒரு தினம் இன்று சர்வதேசத் தலைவர்களாலும் சிந்திக்கப்பட்டு சர்வதேசக் குழந்தைகள் ஆண்டாகக் கொண்டாடப் படுகிறது.

ஒரு தடவை ஜப்பானியக் குழந்தைகள் தங்களுக்கு ஒரு யானை அனுப்புமாறு கேட்டிருந்தார்கள். நேருவும் உடனே ஒரு யானைக் குட்டியை ஜப்பானுக்கு அனுப்பி வைத்தார். ஜப்பான் நாட்டில் யானையே கிடையாது. ஜப்பானியக் குழந்தைகள் யானையைக் கண்டு அளவிலா ஆனந்தம் அடைந்து நேரு மாமாவுக்கு நன்றி தெரிவித்தார்கள்.

நேபாள நாடு இமயமலைச் சரிவிலுள்ளது. இருப்புப் பாதை கிடையாது. அந்நாட்டுக் குழந்தைகள் புகை வண்டியை நேரில் பார்த்தது கிடையாது. நேரு மாமா அந்த மன்னரின் பிறந்த நாள் பரிசாகச் சிறிய புகை வண்டி ஒன்றை அனுப்பி வைத்தார். நேபாளத்தின் தலைநகரான காட்மாண்டுவில் புகைவண்டி நிலயத்தை அமைக்க நூறுயிரம் ரூபாய் செலவாயிற்று. நேபாளக் குழந்தைகள் அப்புகை வண்டியைக் காணும் பொழுதெல்லாம் நேரு மாமாவை நினைவுகூரத் தவறுவது இல்லை.

உலகத்தில் குழந்தைகள் உள்ளவரை நேரு மாமாவை யாரும் மறக்க மாட்டார்கள். மறக்கவும் முடியாது. அவர் உலகக் குழந்தைகளின் 'சாச்சா'வாயிற்றே!

மூன்றாவது பரிசுக்கதை

# காஷ்மீர், காஷ்மீர்!

## ஆர். கண்ணன்

குப்பம்பட்டி என்னும் ஊரில் ஒரு விறகு வெட்டி இருந்தான். அவன் தினமும் காட்டிற்குச் சென்று விறகுகளை வெட்டி, அதை விற்று, அதில் வரும் பணத்தைக் கொண்டு, தன் குடும்பத்தை நடத்திக் கொண்டிருந்தான்.

ஒருநாள் அவன் விறகு வெட்டக் காட்டிற்குள் வெகு தூரம் சென்று விட்டான். அவன் திரும்புவதற்குள் சூரியன் மறைந்தது. அதனால் அவனுக்கு வழி தெரியவில்லை. அப்பொழுது தூரத்தில் ஒரு வீடு தென்பட்டது. இன்று இரவு மட்டும் இவ்வீட்டில் தங்கிவிட்டு நாளை காலை புறப்படலாம் என்றெண்ணி அவ்வீட்டிற்குச் சென்றான். அந்த வீட்டில் ஒரு கிழவனும், கிழவியும் இருந்தனர். விறகு வெட்டி அவர்களிடம் சென்று அன்று இரவு மட்டும் தங்கிவிட்டுப் போவதாகக் கேட்டான். அவர்களும் சம்மதித்தார்கள். ஆகவே அவன் அங்கு ஓய்வெடுத்துக் கொண்டான். அப்பொழுது அந்தக் கிழவனும், கிழவியும் ஒரு பெட்டியைத் திறந்து அதில் இருந்த ஒரு மந்திரக் கைக்குட்டையைத் தங்கள் தலையில் கட்டிக் கொண்டு இரு காலணிகளை அணிந்து கொண்டு ''காஷ்மீர்'' ''காஷ்மீர்'' என்றார்கள். உடனே அவர்கள் காஷ்மீருக்குப் பறக்கத் தொடங்கி விட்டார்கள். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த விறகு வெட்டி எழுந்திருந்து அந்தப் பெட்டியைத் திறந்தான். அதில் ஒரு மந்திரக் கைக்குட்டையும், இரு காலணிகளும் இருந்தன. விறகு வெட்டி அந்தக் கைக்குட்டையைத் தன் தலையில் கட்டிக் கொண்டு காலணிகளை அணிந்து கொண்டு ''காஷ்மீர்'' ''காஷ்மீர்'' என்றான். உடனே அவனும் பறக்கத் தொடங்கி விட்டான் காஷ்மீருக்கு.

அங்கு அவன் அரண்மனைத் தோட்டத்தில் இறங்கி, அங்கு இருந்த மரத்தில் பழுத்திருந்த பழங்களைப் பறித்துத் தின்றான். அதைப் பார்த்த காவலர்கள் கோபம் அடைந்தனர். அவனை இழுத்துக் கொண்டு அரசரின் முன் நிறுத்தி முறையிட்டனர். அவ்வரசர் அவனைப் பெரிய சந்தனக் கட்டையில் கட்டி, அவனுக்குத் தூக்குத் தண்டனை விதித்தார். மறுநாள் அவனுக்குத் தூக்குப் போடு முன் ''உன்னுடைய கடைசி வேண்டுகோள் என்ன?'' என்று கேட்டார்: அதற்கு விறகு வெட்டி சாமர்த்தியமாக ''என்னுடைய காலணிகளையும், கைக்குட்டையையும் கொண்டு வாருங்கள். இதுதான் என்னுடைய கடைசி வேண்டுகோள்'' என்றான்.

அரசரும் அப்படியே செய்தார். உடனே விறகு வெட்டி கைக்குட்டையைத் தன் தலையில் கட்டிக் கொண்டு, காலணிகளைத் தன் கால்களில் அணிந்து கொண்டு ''குப்பம்பட்டி, குப்பம்பட்டி'' என்று கூவினான். உடனே அவன் சந்தனக் கட்டையுடன் குப்பம்பட்டிக்கே பறக்கத் தொடங்கி விட்டான். அங்கு அவன் சந்தனக் கட்டையை விற்றான். அதற்கு அவனுக்கு நூறு பொற்காசுகள் கிடைத்தன. அதை வைத்துக்கொண்டு அன்றிலிருந்து நல்வாழ்வு வாழத் தொடங்கினான்.

படம் வரைந்தது: ஆர். லக்ஷ்மி





# திருமதி சீதாலக்ஷ்மி சங்கர அய்யர்

காலஞ்சென்ற திரு டி. எஸ். சங்கர அய்யர் (Retd. Financial Commissioner of Railways, New Delhi) அவர்களின் மனைவியாரான திருமதி சீதாலக்ஷ்மி சங்கர அய்யர் 27.6.79 அன்று காலை தனது 89வது வயதில் இறைவனடி சேர்ந்தார்.

இந்தியாவிலேயே தமிழில் முதன் முதலாகக் கம்பளி நூல்வேலைப் புத்தகங்களை (Knitting) தனது சொந்த Pattern-களில் ராமன் நூல்வேலைப் புத்தகங்கள் என்னும் பெயரில் வெளியிட்ட அன்னாரை, கல்கி வாசகர்கள் விளம்பரங்கள் மூலம் அறிவார்கள். இவ்வெளியீட்டில் பெற்ற இலாபம் முழுவதையும் அன்னார் தரும காரியங்களுக்குக் கொடுத்து உதவினார். சிறு வயது முதலே அன்னார் பூனா, கல்கத்தா, டில்லி, திருச்சி முதலிய இடங்களில் சமூகத் தொண்டு செய்து பலருக்குத் தாயாக விளங்கினார். திருச்சி சேவா சங்கத்தின் நிறுவன அங்கத்தினர்களில் ஒருவரான இவர் அதன் தலைவியாயிருந்து அதன் வளர்ச்சிக்காக மிக்க ஆர்வத்துடன் தொண்டு செய்தவர். மற்றும் திருச்சியில் Y.W.C.A., விழி இழந்தோர் பள்ளி, Guild of Service ஆகியவற்றின் முன்னேற்றத்தில் முக்கியப் பங்கேற்றிருக்கிறார். திருச்சி மன்னார்புரம் Civic Associationனின் தலைவராக இருந்து அப்பகுதி மக்கள் பல வசதிகள் பெற வழிசெய்தார்.

அன்னார் மறைந்து விட்டாலும் அவர் செய்த தொண்டுகள் நமது இதயத்தில் என்றும் நிறைந்திருக்கும் என்பது உறுதி.

அன்னாருக்கு நமது நன்றியும், அஞ்சலியும்.

தோற்றம் : 28-9-1922 மறைவு : 2-8-1978



திரு டி. எஸ். பாலசுப்ரமணியன் (Dy. Director, S.I.S.I., Bombay) அவர்கள், 2-8-1978ல் தமது அருமை அன்னையையும், அன்பு மனைவி, மைந்தர்களையும் பரிதவிக்கவிட்டு அமரரானார். அன்னாருடைய ஆத்மா சாந்தியடைய பிரார்த்திக்கும், பிரிவுத் துயரால் துடிக்கும் குடும்பத்தினரின் முதலாண்டு அன்பு அஞ்சலி.



# சாதனை புரிந்த நால்வர் (எழுத்தாளர் ஏகாம்பரம் எழுதியவை)

## 'கமல்'

**நீலகண்டன்,** தமிழாசிரியர்: நான் மூன்றாவது வகுப்பு படித்த போது எனக்குத் தமிழ் போதித்த நீலகண்டன் சிறந்த அறிவாளி என்பதை அப்போதே நான் உணர்ந்தேன். 'என்னடா உன் கையெழுத்து, தலையெழுத்து மாதிரி' என்று அவர் கடிந்து கொள்கிற மாதிரி சொன்னாலும், 'உன் எழுத்தில் வரும் கதை கட்டுரைகள் தலையங்கங்கள் இந்த நாட்டின் தலையெழுத்தையே மாற்றும்' என்ற கருத்துடன்தான் அவர் கூறினார் என்பதை அந்தச் சிறு வயதிலேயே நான் ஊகித்தேன். சமீபத்தில் எனக்குக் காட்டாங்குளத்தூர் தமிழ்ப் பேரவையின் சார்பில் மாபெரும் பாராட்டு விழா நடந்தபோது, பாராட்டுப் பத்திரத்தை நீலகண்டன் தான் எழுதியிருந்தார் என்று தெரிந்தபோது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. நீலகண்டன் இது மாதிரி பாராட்டு விழாப் பத்திரங்கள் இன்னும் பல எழுதிச் சாதனை வீரராகத் திகழ்வார் என்பதில் ஐயமில்லை.

**சின்னதுரை,** தெருக்கூத்து நடிகர்: இன்று நினைத்தாலும் மெய் சிலிர்க்கிறது. உடலில் மின்சாரம் பாய்கிறது. நான் சின்னஞ்சிறுவனாக இருந்தபோது சின்னதுரையின் தெருக்கூத்துநாடகத்தில் அவர் பீமன், யமன், இரணியன், இராவணன் ஆகிய வேஷங்களை ஏற்று நடித்ததைக் கண்டு பயந்து போயிருக்கிறேன். அந்தப் பயத்திலும் அவரது நடிப்புத் திறனை ரசித்திருக்கிறேன். இரவு முழுவதும் அவர் பாடிக் கொண்டே நடிப்பதைப் பார்த்து ரசிக்கும் என்னை அவர் மிகவும் பாராட்டுவார்! ''தம்பி, ஏகாம்பரம்! நாடகக் கலையில் உன் ஆர்வம் ரொம்பப் பிரமாதம்'' என்று என்னைத் தட்டிக் கூறுவார். பின்னால் நான் ஏகாம்பரம் தியேட்டர் துவங்கியபோது சின்னதுரையைத் துவக்க விழாவுக்கு அழைத்தேன். அப்போது அவர் சொன்னார்: ''தம்பி, இப்போது நானும் பெரியவனாகிவிட்டேன், வயசில். நீயும் பெரியவனாகி விட்டாய் திறமையில்'' என்றார். அடுத்த ஆண்டு அகாடமி விருது இவருக்குக் கிடைக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். அப்போது நீங்கள் எல்லாரும் சின்னதுரை, சிறந்த சாதனை வீரர் என்று கூறுவீர்கள்.

**நடனசபாபதி,** பெயிண்டர்: நடன சபாபதியின் கைவண்ணத்தால் மயங்கியவர்களில் நானும் ஒருவன். இன்றும் எங்கள் கிராமத்தில் உள்ள ஐம்பது வீடுகளும் யார் கண்ணும் படாமல் நன்றாக இருக்கிறது என்றால் அந்தப் பெருமை, அந்தச் செயற்கரிய சாதனை, பெயிண்டர் நடனசபாபதிக்கே சேரும். வீடு கட்ட வேண்டும் என்றால் முதலில் திருஷ்டி பூசணிக்காய் கட்டுவார்கள். நடனசபாபதிதான் அதில் கண், மூக்கு போட்டுப் படம் வரைந்து கொடுப்பார். ஆகவேதான் வீடுகளுக்கு திருஷ்டி விழவில்லை. சமீபத்தில் நான் ஊருக்குச் சென்றபோது அவரே என்னிடம் வந்து, ''தம்பி, ஏகாம்பரம், நீ வீடு கட்டும் போது எனக்குச் சொல்லி அனுப்பு'' என்றார். என்ன அன்பு! என்ன பாசம்! (பின்னால் என் வீட்டிற்கு அவர்தான் பூசணிக்காயில் படம் போட்டுக் கொடுத்தார்.)

''பெரியவரே உங்கள் சாதனையைக் கண்டு தலைவணங்குகிறேன்'' என்றேன்.

---

வந்தவர்:- டி. வி அறிவிப்பாளர் குடையைப் பிடித்துக் கொண்டு என்ன சொல்கிறார்?

நண்பர்:- ''அடுத்த 24 மணி நேரத்தில் மழை வரும்'' என்று சொல்கிறார்.

—எஸ். சந்திரசேகர்



தம்பி உன் எளிமையையும் அடக்கத்தையும் கண்டு நான்தான் வியப்படைகிறேன். உலகப் புகழ் பெற்ற எழுத்தாளனாக நீ ஆன பிறகும் நீ என்னைக் கூப்பிட்டு திருஷ்டி பூசணிக்காயில் படம் வரையச் சொல்லி முழுதாகப் பத்து ரூபாய் சன்மானம் கொடுத்தாய். உன் விசாலமான மனத்தையும் பண்பையும் பண்பாட்டையும் எண்ணும் போது பெருமிதம் ஏற்படுகிறது'' என்றார் அவர்.

**பழனி,** சைக்கிள் ரிப்பேரர்: முப்பது வருஷங்களுக்கு முன்பு பழனி சென்னைக்கு வந்த போது பழனிக்கு ஒரு வித்தையும் தெரியாது. ஒரு சைக்கிள் கடைப் பையனாக வேலை செய்தார்.. தம்முடைய சாமர்த்தியத்தாலும் திறமையாலும் இன்று ஒரு சைக்கிள் கடையை வைத்திருக்கிறார். மூன்று வாடகை சைக்கிளுக்குச் சொந்தக்காரரர்.

அவருடைய வளர்ச்சி பாராட்டுக்குரியது. கிட்டத்தட்ட அவர் வந்த சமயத்தில் சென்னைக்கு வந்து சின்ன சின்ன பத்திரிகைகளில் எழுதி, இன்று 'அழுக்கு' பத்திரிகையின் நிர்வாக ஆசிரியராக ஆன பிறகும், பழனியின் நட்பை நான் விடவில்லை.

என் சைக்கிள் பங்சர் என்றால் பழனியிடம் தான் போவேன். பின்னால் மோபெட் வாங்கினேன். அதையும் பழனியிடம் தான் எடுத்துப் போவேன். நான் ஸ்கூட்டர் வாங்கினேன். பியட் கார் வாங்கினேன். எல்லாவற்றையும் பழனிதான் பங்சர் பார்ப்பார். இன்று விலை உயர்ந்த இம்போர்டட் கார் வாங்கியுள்ளேன். அதையும் பழனியிடம் தான் எடுத்துப் போகிறேன். தன் திறமையால் முன்னுக்கு வந்து பங்சர் ஒட்டுவதில் தனக்கென்று ஒரு வழியை அமைத்துக் கொண்டுள்ள பழனிதான். இனி நான் ஏரோப்பிளேன் வாங்கினாலும் பங்சர் பார்ப்பார்!

# விபரீதமான உல்லாசப் பயணம்!

எங்கள் ஊரான சத்திரப் பட்டியிலிருந்து சுமார் பத்துக்கல் தொலைவிலுள்ளது மேற்குத் தொடர்ச்சி மலையில் ''அய்யனார் அருவி.'' மலையின் மேல் 3 கல் தொலைவு நடந்தால் ''வழுக்கும் பாறை'' என்ற இடத்தை அடையலாம்.

உயரமான, சரிவான, குழிந்த அந்தப் பாறையின் மீதிருந்து வழுக்கிக் கீழே விழுந்து நீராடுவார்கள். சிறிது சாரல் விழுந்தாலும் போதும் காட்டு வெள்ளம் கரை புரண்டோடும். பொதுவாக ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் அங்கு வெள்ளம் அடிக்கடி வருமாதலால் நீராடச் செல்ல மாட்டார்கள்.

மழை பெய்து கொண்டிருக்கும் ஒரு நாளில் அருவிக்குப் புறப்பட்டோம். சென்றவர்களில் கல்லூரியில் படிக்கும் எங்கள் மூவரைத் தவிர மற்றவர்கள் சிறுவர்கள். அருவியை அடைந்ததும் அங்கு ஒருவர் மேலே போக வேண்டாம் என்று தடுத்தார். எங்களைத் தவிர மலையில் ஆள் யாரும் தென்படவில்லை. தடுத்தவரை அசட்டை செய்து விட்டு மேலே சென்றோம்.

பருவ காலத் தூரல் கொட்டிக் கொண்டிருந்தது. எல்லோரும் அக்கரையில் உள்ள பெரிய பாறை ஒன்றில் உடைமைகளை வைத்துவிட்டு ஆனந்தமாக நீராடிக் கொண்டு இருந்த வேளை.

திடீரென்று அருவிநீர் கறுப்பாகியது. 'காட்டு வெள்ளம் வருகின்றது' என்று புரிந்து கொள்ளவே பல நிமிடங்கள் பிடித்தன. வினாடிக்கு ஒரு அடி வீதம் உயர்ந்த நீர் உயிர் தப்புவதற்காக ஏறிய பாறையின் மீதும் ஏறத் தொடங்கியது. ''அவ்வளவுதான். கதை முடிந்து விட்டது'' என்று எல்லோரும் கலங்கினோம். கூட வந்த சிறுவர்கள் அழுது அரற்றினார்கள். இந்த வேளையில் பொழுது வேறு சாயத் தொடங்கியது.



கடைசி முயற்சியாக மூவரும் பொங்கி வரும் வெள்ளத்தை எதிர்த்துப் பாறைகளின் மேல் கால் வைத்து மலையின் மேல் நடக்கத் தொடங்கினோம். சுமார் ஒன்றரைக் கல் தூரம் மலையின் மேல் நடந்தும் எதிர்க் கரையை அடைய வழி தெரியவில்லை. கடைசியாக ஒரு குறுகலான இடத்தைக் கண்டு பிடித்தோம். வழுக்கும் தன்மையுள்ள இரண்டு பாறைகள் 8 அடி தூரத்தில் இருந்தன. அவைகளைக் கடந்து விட்டால் கீழே இறங்கி விடலாம். ஆனால் கீழே விழுந்து விட்டாலோ, காட்டாறு வெள்ளம் பாறைகளின் மேல் மோத வைத்து நம்மைச் சுக்கு நூறாக்கி விடும். கடவுளை வேண்டிக் கொண்டு அருகே இருக்கும் விழுதைப் பற்றிக் கொண்டு மறு கரைக்குத் தாவினேன். மற்ற இருவரும் அதேபோல் கரைக்கு வந்தார்கள். பின் மலையின் கீழே இறங்கி, சிறுவர்கள் நின்ற இடத்துக்கு வந்தோம்.

அவர்கள் மிகுந்த ஆபத்தான நிலையில் இருந்தார்கள். இன்னும் சில அங்குலங்களுக்கு நீர் ஏறினால் காட்டு வெள்ளம் அவர்களை அடித்துக் கொண்டு போய் விடும். இருகரைக்கும் உள்ள இடைவெளி சுமார் 25 அடிகள் இருக்கும். நாங்கள் கொண்டு வந்த எல்லா வேட்டிகளையும் ஒன்றாக முடிந்து ஒரு முனையை இக்கரையில் மரத்தில் கட்டினோம். மற்ற முனையை அக்கரையில் உள்ள ஒரு சிறுவனிடம் தூக்கிப் போட்டு அதை அவன் இடையில் கட்டிக் கொண்டு வெள்ளத்தில் குதிக்கச் செய்தோம். மூவரும் சேர்ந்து ஒவ்வொரு பையனையும் இதேமாதிரி வேட்டியால் இழுத்துக் கரை சேர்த்தோம்.

எல்லோரும் இக்கரைக்கு வந்ததும் கடவுளுக்கு நன்றி சொல்லிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் ஓடினோம். அதிலிருந்து மழைக் காலங்களில் - ஏன் சாதாரண நாட்களில் கூட அய்யனார் அருவிக்குப் போக பயமாக இருக்கின்றது.

— ரத்தினம், சத்திரப்பட்டி



# யுகங்கள் மாறும்போது...!

**வாஸந்தி**

## 4

**ப**ட்சிகளின் உற்சாகமான ஆரவாரம் காதுக்கு இனிமையாக இருந்தது. அந்த மாமரத்தின் இருண்ட கிளைகளுக்குள் எங்கே உட்கார்ந்திருக்கின்றன என்று புரியாமல் பலவிதமான சப்தங்கள் மட்டும் கேட்ட வண்ணம் இருந்தது. தினம் தினம் ஒரே மாதிரி விடியும் சூரியோதயத்தைக் கண்டு இந்தப் பட்சிகள் ஏன் இந்த ஆரவாரம் செய்கின்றன என்று மைதிலி வியந்தாள்.

வெறும் அருவக் குரல் கொடுப்பதை நிறுத்தி விட்டுப் பட்சிகள் சின்னச் சின்ன கும்பலாய் மரத்திலிருந்து 'டேக் ஆஃப்' செய்தன. இளம் பச்சை, நீலம், மஞ்சள் சிவப்பு, கறுப்பு.... எத்தனை நிறங்கள்! இப்படி நிச்சிந்தையாக இருக்க நமக்கேன் தெரியவில்லை?

நளினி காலேஜுக்குக் கிளம்புவதற்குள் தன் பூஜையை முடித்துக் கொள்ள வேண்டும் என்கிற நினைவு வந்தவுடன் அவள் பூஜைக்கு வேண்டிய மல்லிப்பூக்களைப் பறித்துக் கொண்டு வீட்டுக்குள் நுழைந்தாள். நேற்று அப்படி ஓர் ஆத்திரம் வந்தது எப்படி என்று நினைக்கையில் திகைப்பாக இருந்தது. அவள் வெளியில் போயிருக்கிறாள் என்று கஸ்தூரி சொன்னதும் தன்னிடம் சொல்லாமல் ஓடியிருக்கிறாள் என்கிற கோபம் கரீரென்று மனசில் ஏற்பட்டது. ஆனால் அது ஏற்பட்ட சில வினாடிகளிலேயே சமாதானமாகி விட்டது. அவள் சீக்கிரம் வந்து விடுவாள் என்கிற நினைப்பில் தன்னை மீறிக் கொண்டு போய்விட மாட்டாள் என்கிற நம்பிக்கையில் அவள் பொறுமையுடன் உட்கார்ந்திருந்தாள். பொழுது சாய்ந்து இருள் கவிய ஆரம்பித்ததும் மெள்ள மெள்ள ஆத்திரமும் யோசனையும் அதிகமாயிற்று. ரொம்ப நல்ல பெண் மாதிரி 'உனக்குக் கவலை கொடுக்கும்படியா நான் நடந்துக்க மாட்டேன் இனிமே' என்று நேற்று சொன்னவள் இன்றைக்குக் கிளம்பிப் போனாளே என்கிற ஆத்திரம் ... எங்கே சுத்துகிறாள், எந்த வரம்புக்குள் இருப்பாள் என்கிற யோசனை .... இரண்டும் சேர்ந்து அவள் தவித்துப் போனாள். இவ்வளவு நாட்கள் அனுபவித்த சிறுமைகளையெல்லாம் தாங்கிக் கொள்ள முடிந்தது. தன்னுடைய தனித்தன்மையையும் சுய கௌரவத்தையும் மறந்து ஓர் ஆண் மகனின் ஆதிக்கத்துக்கு உட்பட்டு இருக்க முடிந்தது ஏதோ ஒரு சத்தியத்துக்கு ஓர் ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டமாதிரி.... இப்பொழுது மகளின் நடவடிக்கையைக் கண்காணிக்கா விட்டால் நாளைக்கு அவளுக்கு ஏற்படக்கூடிய சிறுமைகளையும் அடிகளையும் நினைத்துப்

பார்க்கையிலே அதைத் தன்னால் தாங்க முடியாது என்று தோன்றிற்று.

நிசப்தமான அந்த இரவு வேளையில் கடிகாரம் மணி ஏழரை என்று ஓர் அடி அடித்து ஓய்ந்தது. வாசல்கேட் திறக்கிற சத்தமும்



நளினியின் வேகமான நடையும் கேட்டன. வந்து விட்டாள் என்கிற நிம்மதி ஏற்பட்டாலும் எத்தனை துளுத்து விட்டாள் இவள் என்று கோபம் மறுபடியும் எழுந்தது.

நளினி ஓர் அவசரத்தோடு உள்ளே நுழைந்து அவளுடைய முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்ட மாதிரி நின்றாள். பிறகு அவள் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டு,

''ஓ மம்மி, ஐ ஆம் ஸோ ஸாரி!'' என்றாள்.

மைதிலி தன்னுடைய கையை மெல்ல விடுவித்துக் கொண்டாள், பதில் ஒன்றும் சொல்லாமல்–

நளினி அவளுடைய தாடையைப் பிடித்துக் கொண்டாள்.

''மம்மி கோச்சக்காதே மம்மி ப்ளீஸ்!''

மைதிலி சட்டென்று அவளை நிமிர்ந்து பார்த்தாள். மார்பின் வளைவுகளை நன்றாகக் காட்டும்படியான டீ ஷர்ட் – அவசர நடை நடந்து வந்ததில் இலேசான மூச்சிரைப்பில் மார்பகங்கள் எழும்பி இறங்கின. இந்த மாதிரி ஒரு நிலையில் இவள் அருகில் ஓர் ஆண் மகன் இருந்தால் அவன் எந்த அளவுக்குத் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளப் பார்ப்பான்? சொன்ன வார்த்தையை நிமிஷமாய் மறந்து பறக்க விடும் இந்தப் பெண்ணும் எந்த அளவுக்குத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வாள்?

''நளினி, என்னை நீ ஏமாத்திட்டே. நேத்து நீ என்ன சொன்னாய். இன்னிக்கு எப்படி நடந்துண்டிருக்கே? என் மேலே உனக்குக் கொஞ்சம் கூட மதிப்பில்லேன்னு காண்பிச்சுட்டே!''

நாபியிலிருந்து துக்கம் எழும்பித் தொண்டையை அடைத்தது. கண்களிலே லேசாக நீர் திரையிட்டது.

நளினி தலையைக் குனிந்து கொண்டாள். மாலையில் மனசில் பொங்கிய உல்லாசமெல்லாம் சட்டென்று அநியாயமாக வடிந்து போன மாதிரி இருந்தது. அம்மா என்னென்னவோ கற்பனை செய்து கொண்டு பயப்படுகிறாள் என்று தோன்றிற்று.

''நான் ஜடம் மாதிரி என் சௌகரியத்துக்காக வேஷம் போட்டேன்னு சொன்னியோல்லியோ? இனிமே என்னால வேஷம் போடக்கூட முடியாது. நீ தப்பு பண்ணினியானா அதுக்கு நான் கோபப்பட்டுத்தான் ஆகணும். அது என்னுடைய பொறுப்பு!''

''ஐ ஆம் ஸாரி மம்மி'' என்றாள் நளினி மெல்லிய குரலில். கஸ்தூரி கேட்டுக் கொண்டு

நிற்பாளோ என்று பயந்து கொண்டு மைதிலி குரலை உயர்த்தாமல் பேசியதைப் புரிந்து கொண்ட மாதிரி —

''சரி. நீ டிரெஸ்ஸை மாத்திண்டு சாப்பிட வா. நாம் அப்புறமா பேசிக்கலாம்'' என்றான்.

நளினி சட்டென்று எழுந்தாள். கஸ்தூரி எதையாவது அரைகுறையாகக் கேட்டுக் கொண்டு வெளியில் வம்பு பேசப் போகிறாளோ என்று மைதிலிக்கு யோசனையாக இருந்தது. இந்த ஊர் இன்னும் ஒரு தலைமுறைக்குப் பேசக் கூடிய அளவுக் கதைகள் இந்த வீட்டில் நடந்திருக்கின்றன. இன்னும் புதிய கதைகள் இங்கு புறப்படக் கூடாது. அவளால் தாங்க முடியாது... நளினிக்குச் சொல்ல வேண்டிய விஷயங்களை மாடியில் தனியாகத்தான் சொல்ல வேண்டும்..

நளினி உடை மாற்றிக் கொண்டு வந்ததும் சாப்பாடு மௌனமாக நடந்தது. அந்த மௌனம் வித்தியாசமாகத் தெரியக் கூடாது என்று மைதிலி ட்ரான்ஸிஸ்டரில் ஏதோ இசையை முடுக்கி விட்டு உட்கார்ந்தாள்.

நளினி வேகமாகச் சாப்பிட்டு எழுந்து போனான்.

கீழே கதவையெல்லாம் பூட்டிக் கொண்டு மேலே தன் அறைக்குச் சென்று படுக்கையில் சாய்ந்தபடி ஏதோ ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டாள் மைதிலி. அதில் மனசு பதியாமல் நழுவி நழுவி நின்றது. நளினி நேற்று இரவு சொல்லிவிட்டுப் போனது சாட்டையாய் மனசில் இன்னும் விழுந்து கொண்டிருந்தது. இந்த மாதிரி ஓர் உணர்வை நீ அனுபவித்ததேயில்லை என்று அவன் சொன்ன வார்த்தைகள் மனசை விட்டு அகலாமல் நின்றது. அவள் அழகைக் கண்டு ஆசைப்பட்டுப் பிள்ளை வீட்டார் பெண் கேட்க வந்து, அவர்களுடைய பணத்தைக் கண்டு அவள் சௌகரியமாயிருப்பாள் என்கிற தீர்மானத்தோடு நடந்த கல்யாணம் அது. கணவனின் உருவத்தை முதன் முதலில் பார்த்தபோது அவள் மனசில் ஏற்பட்ட அதிர்ச்சி இன்னமும் மனசில் பசுமையாக இருந்தது. அந்த அதிர்ச்சி அவர் தன்னை நெருங்கும் போதெல்லாம் இடையில் புகுந்து ஒரு பெரிய சுவரை எழுப்பிற்று. அவருடைய அணைப்புக்குள் அவளை இறுக வைத்தது. அவள் இயன்றவரை இயல்பாக இருக்க முயன்றாள். வீட்டை நன்றாக நிர்வகித்தாள். அவருடைய தேவைகளைக் கவனித்துக் கொண்டாள். ஆனால் படுக்கையில் படுத்து விளக்கு அணைத்து இருள் சூழ்ந்ததும் உடல் இறுகிப் போகும். எந்தவித ஆர்வமும் இல்லாமல் அவருக்கு அடங்கிப் போகும் தன்னால் அவருக்கு முழுவதும் திருப்தியளிக்க முடியவில்லை என்கிற குற்ற உணர்வு அவளுள் புகுந்து நமைச்சல் ஏற்படுத்தும். அந்த நமைச்சலினாலேயே அவருடைய அதிகார சுபாவத்துக்கும் கோபமான குரூர வார்த்தைக்கும் . அவளாகவே ஒரு நியாயம் கற்பித்துக் கொண்டு அடங்கிப் போனான்.

''உனக்கு என்னைப் பிடிக்கல்லே. நானே ஒரு சுந்தரப் புருஷனா இருந்திருந்தா நீ வேறே மாதிரி இருந்திருப்பே!...''

அவரைத் திருப்திப்படுத்துவது அவளுக்கு அசாத்தியமான காரியமாகப் பட்டது. அவருடைய மனசை நாகரிகப்படுத்துவது ஆகாத காரியமாக இருந்தது. தன்னுடைய தாழ்வு உணர்ச்சியாலும் அவள் அழகின் மேல் ஏற்பட்ட பொறாமையினாலும் அவர் மனமே விகாரமாகிப் போயிற்று. மனிதாபிமான உணர்வே இல்லாமல் போயிற்று. இரண்டு குழந்தைகளுக்கு அவள் தாயாகிய பின்னும் அவரிடம் எதும் நெருக்கமே ஏற்படவில்லை. அவருடைய வக்ர சுபாவத்தினால் அவளுடைய மனசே இறுகிப் போயிற்று. ஆனால் அவரிடம் முரண்டு பிடித்துக் கோபத்தைக் காட்டினால் விளைவு விபரீதமாக இருக்கும் என்று அவள் புரிந்து கொண்டாள். அவளுடைய மௌனமும் பொறுமையும் அவருடைய ஆத்திரத்தை இன்னும் அதிகப்படுத்திற்று.

''உனக்கு வேறே யாராவது சினேகிதன் இருப்பான். அதான் என்கிட்டே நீ இப்படியிருக்கே!''

வார்த்தைகள் நாராசமாய் இருக்கும். கண்களிலிருந்து நீர் பெருகும். அவள் பதிலே சொல்



வாமல் உட்கார்ந்திருப்பாள். உன்னை நம்பிக் கொண்டு நான் உட்கார்ந்திருக்கேனு என்கிற மாதிரி அவர் வேறு பெண்களை நாடிப் போனார். மதுவை அதிகமாக அருந்தினார். நம்மை விட்டு இவளுக்கு எங்கும் போகப் போக்கிடமே கிடையாது என்று உணர்ந்தே அவர் அப்படி நடந்து கொள்கிறார் என்று அவளுக்குத் தோன்றும். மௌனம் ஒன்று தான் தனக்கு ஆயுதம் என்று அவள் நினைத்துக் கொள்வாள். அவர் கடைசியில் பாரிச வாயுவால் படுக்கையில் விழுந்து ஆறு மாதம் கிடந்த போது அவள் மௌனமாக அவருக்கு சிகிச்சை செய்தாள். படுக்கையில் படுத்தபடி அவர் அசிங்கமாகக் கத்துகையில் தன்னால் எப்படி அப்படி வாயை மூடிக் கொண்டு இருக்க முடிந்தது என்று இப்பொழுது நினைக்கையில் ஆச்சரியமாக இருந்தது. தான் வாஸ்தவத்தில் நளினி சொன்ன மாதிரி ஒரு ஜடத்தைப் போல் வேஷம் போட்டோமோ என்று தோன்றிற்று. சில சமயங்களில் மனசில் கண்ணீரும் கோபமும் சீறிக் கொண்டு வருகையில்'ஓ இவருக்கு வாயடைத்துப் போய் இருக்கக் கூடாதா?' என்று கூடத் தோன்றும். நான் ஜடமில்லை எனக்கு உணர்ச்சிகள் இல்லாமல் இல்லை என்று மனசு பொங்கும். ஆனால் அவருடைய கத்தலுக்கு ஏதும் பதில் சொல்வது அநாகரீகமானது. தன்னையே சிறுமைப் படுத்தக் கூடியது என்கிற உணர்வில் அவள் பேசாமல் இருப்பாள். கடைசி நாட்களில் அவருக்கு வாயடைத்துப் போயிற்று. அவள் வாயை மூடிக் கொண்டு பணி விடை செய்கையில் இரண்டு கண்கள் அவள் மேலேயே பதிந்திருக்கும். அதில் ஆத்திரமும் துவேஷமும் குறைந்திருந்த மாதிரி அவளுக்குப் பிரமையேற்படும். உயிர் போவதற்கு முன் அவருடைய கண்களிலிருந்து அவள் எதிர் பாராமல் நீர் பெருகிற்று. அதற்கு என்ன அர்த்தம் என்று புரியாமல் அவள் அதிர்ந்து போனாள். அதை அவள் அவசரமாகத் துடைக்க விரைகையில் அவளைப் பார்த்த பார்வை நிலைகுத்தி நின்றது. அவள் ஓர் அதிர்ச்சியுடன் பச்சாதாபத்துடன் அந்தக் கண்களை மூடினாள். அந்தக் கடைசி விநாடியின் ரகசியம் தனக்கு மட்டுமே சொந்தம் என்று அவள் நினைத்துக் கொண்டாள். போற்றி வைக்கப்பட வேண்டிய ரகசியம்... அவரை நினைக்கும் போதெல்லாம் அவர் மேல் வெறுப்பு ஏற்படாமல் மனசை மென்மையாக்கும் ரகசியம்.....

ஆனால் இன்றைக்குப் பழசையெல்லாம் அசை போடுகையில் பிரேமை என்கிற



உணர்வை நீ அனுபவித்ததில்லை என்று சொன்னதை நினைத்துப் பார்க்கையில் தன்னுடைய வாழ்வே விரயமாகப் போன மாதிரி இருந்தது. வாஸ்தவத்தில் தான் எதையுமே சாதிக்கவில்லை என்கிற உணர்வின் வெறுமை மனசை வியாபித்தது. அவள் வெகு நேரம் யோசனையில் ஆழ்ந்தபடி உட்கார்ந்திருந்தாள். இந்த மாதிரி ஒரு மனச் சூன்யம் நளினிக்கு ஏற்பட்டு விடக் கூடாது. அந்த அசோக்கின் குடும்பத்தைப் பற்றி விசாரித்து விட்டு அவன் படிப்பும் உத்தியோகமும் மனசுக்குப்பிடித்தால் கல்யாணத்துக்கு ஒப்புதல் தருவதைத்தவிர வேறு வழியில்லை என்று தீர்மானித்துக் கொண்டாள். நளினியின் உணர்ச்சிகளுக்குக் கடிவாளம் போடுவது இனிமேல் இயலாத காரியம் என்று ஒரு பயம் தோன்றிற்று. திருமணத்தை நடத்தி விடுவதுதான் விவேகமான காரியம் என்று தோன்றிற்று.

அவள் நிதானமாக நளினியின் அறைக்குச் சென்றாள்.

ஏதோ புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த நளினி சட்டென்று நிமிர்ந்து பார்த்தாள்.

மைதிலி நாற்காலியில் அமர்ந்து கொண்டாள்.

''நளினி அசோக்கின் சித்தப்பாவுடைய விலாசத்தை வாங்கிண்டு வா. நான் முதல்லே அவருக்கு எழுதி எந்த மாதிரி குடும்பம்னு தெரிஞ்சுக்கணும்.''

நளினி ஒரு விநாடி அவளை நம்ப முடியாதவள் மாதிரி பார்த்தாள். பிறகு மைதிலியின் கையைப்பிடித்துக் கொண்டு, ''ஓ, மம்மி, யூ ஆர் ஸோ ஸ்வீட்!'' என்றாள்.

''ஆனா பரீட்சை முடிஞ்சப்புறம்தான் கல்யாணத்துக்கு ஒப்புத்துப்பேன். அதாவது அந்த இடம் எனக்குச் சரின்னு பட்டுதானா. நீ நான் சொன்னதைக் கேட்காம இருட்டினப்புறம் வீட்டுக்கு வந்தியானா நான் விலகிண்டுடுவேன், நீயே உன் வாழ்க்கையை அமைச்சுக் கோன்னு. அப்படிக்கூட உன் உணர்ச்சிகளை உன்னாலே கட்டுப்படுத்திக்க முடியல்லியானா நீ ஒரு பொறுப்பே இல்லாத பொண்ணுன்னு அர்த்தம்.''

நளினி அவளை அணைத்துக் கொண்டாள். ''மம்மி இனிமேல் நான் பொறுப்பா நடந்துப்பேன்.''

''அப்புறம் இனிமே அந்த மாதிரி டீ ஷர்டைப் போட்டுண்டு வெளியே போகக் கூடாது.''

''எந்த மாதிரி?''

''லுக் அட் மீ, ஐ லவ் யூ'ங்கிற டீ ஷர்ட்களை!''

நளினி கலகலவென்று சிரித்தாள். ''மம்மி, நீ ரொம்ப ஓல்ட் ஃபாஷண்ட்!''

''இருந்துட்டுப் போறேன். இப்படி இருக்கிறது சௌகர்யம். ஆபத்தில்லே....''

''ஓ. கே. ஓ. கே. இனிமே நீ எதைச் சொன்னாலும் சரிம்பேன்.''

மைதிலி ஓர் இலேசான புன்னகையுடன் தன் அறைக்குச் சென்றாள். மனசு சற்று லேசாகிப் போன மாதிரி இருந்தது. இந்த முடிவுக்கு முதலிலேயே வர முடியாமல் மன

சில் ஏன் அத்தனை பயங்களும் சஞ்சலங்களும் புறப்பட்டன? இப்பொழுது காலையில் பூஜை அறையில் விளக்கேற்றுகையில் மனசில் மறுபடியும் ஒரு சஞ்சலம் ஏற்பட்டது. தான் எடுத்த முடிவு சரிதானு? பச்சைக் குழந்தையாக இருக்கும் நளினி பொறுப்பாக இருப்பாளா? அவன் அவளைப் புரிந்து கொண்டு அன்பாக இருப்பானு? அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள். சாதாரணமாக இது எந்தவிதமான கல்யாணத்திலும் ஏற்படும் சந்தேகங்கள்.

அவள் பூஜை அறையை விட்டு வெளியில் வருகையில் நளினி ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டு மாடிப்படிகளில் துள்ளிக் கொண்டு இறங்கினுள். பதவிசாக ஒரு புடவையைக் கட்டிக் கொண்டிருந்தாள். நெற்றியில் இன்னைறக்குப் பளிச்சென்று ஒரு பொட்டு கூட இருந்தது. மைதிலியைப் பார்த்ததும் அர்த்த புஷ்டியுடன் சிரித்தாள்.

நளினியின் முகத்திலும் பேச்சிலும் நடையிலும் ஓர் உல்லாசம் தெரிந்தது. ''மம்மி போயிட்டு வரேன்'' என்பது பாட்டாக வந்தது. தோட்டத்தில் முனுசாமியைப் பார்த்ததும் 'குட்மார்னிங் முனிசாமி'' என்று பளிச்சென்று ஒரு சிரிப்பு. ஓட்டமும் நடையுமாக அவள் சிரித்துக் கொண்டு கேட்டைத் திறந்து வெளியே போகையில் 'ஓ இது என்ன உல்லாசம்' என்று மைதிலிக்குத் தோன்றிற்று. இப்படிக் கூட மனசில் ஒரு சந்தோஷம் உருவாக வேண்டுமானுல் அது எப்படிப்பட்ட அற்புத உணர்வாக இருக்க வேண்டும்?

அவள் காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு மாலாவுக்கு விவரமாக ஒரு கடிதம் எழுதினுள். 'கல்யாணம் நிச்சயமானவுடன் உனக்கு எழுதுகிறேன். சற்று முன்னதாக வந்துவிடு' என்று எழுதினுள். 'எனக்கு நீ வந்தால் தான் சௌகர்யம். நளினிக்கு இப்பொழுதே இந்த உலக நினைவில்லை...'

அன்றுமாலை நளினி அசோக்கையும் அழைத்துக்கொண்டு வந்தாள். அசோக் தன்னுடைய சித்தப்பாவின் விலாசத்தைக் கொடுத்தான். அவர்கள்,அவன் இஷ்டத்துக்கு விரோதமாக எதுவும் சொல்ல மாட்டார்கள் என்றுன். தன் பூர்வோத்திரமும் படிப்பும் உத்தியோகமும் கௌரவமானவை என்று உணர்த்திளுன்.

மைதிலி சம்பிரதாயமாக அவனுடைய சித்தப்பாவுக்கு ஒரு கடிதம் எழுதினுள். விரைவிலேயே அவரிடமிருந்து பதில் வந்தது, தமக்கு ஏதும் ஆட்சேபமில்லை யென்று. முகூர்த்தத் தேதி அவர்கள் சௌகர்யப்படி வைத்துக் கொள்ளலாம் என்று ... அவர்கள் சற்று ஒதுங்கியிருக்கிறுர்களோ என்று மைதிலிக்குத் தோன்றிற்று. இனிமேல் இதைப் பற்றியெல்லாம் யோசித்து லாபமில்லை என்று தோன்றிற்று...

இப்பொழுதெல்லாம் நளினி அசோக்கைப் பார்க்கப் போகவில்லை. அவனே வந்தான். இரண்டு பேருமாக வெளியில் போய்விட்டு இருட்டுவதற்கு முன் திரும்பி வந்தார்கள். அந்த அளவுக்கு அவர்கள் அவளுக்கு மரியாதை கொடுத்தது அவளுக்கு இதமாக



ஒரு நகைச்சுவை எழுத்தாளர் தமது திருமண அழைப்பிதழின் கடைசி பகுதியை கீழ்க்கண்டவாறு அச்சடித் திருந்தார்:

'...தாங்கள், தங்கள் சுற்றம் சூழ வந்திருந்து மணமகனுக்கு ஆறுதல் வழங்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.'

—நா. ஜெயபால்

இருந்தது. புடவையுடன் நளினி பதவிசாக இப்பொழுது போகிறுள். மைதிலிக்கு அதை நினைக்கையில் வேடிக்கையாக இருந்தது.

அவள் அன்று மாலை குல் மொஹர் மரத்தை பார்த்தபடி பறவைகளின் ஆரவாரத்தைக் கேட்டபடி தோட்டத்தில் உட்கார்ந்திருந்தாள். கேட் திறக்கும் ஓசை கேட்டது. ராஜு உள்ளே வந்து கொண்டிருந்தார். அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவர் அந்த மாதிரி வந்து எத்தனையோ வருஷங்களாகி விட்டது. இப்பொழுது எவ்வளவு மாறி விட்டார் என்று தோன்றிற்று. முன்பிருந்த சிவப்பும் கண்களில் இருந்த சிரிப்பும் இப்பொழுது இல்லை என்று தோன்றிற்று. ஏதோ ஒரு பனிப்படலம் கண்ணைப் போர்த்திய மாதிரி கண்கள் மங்கித் தெரிந்தன.

''வாருங்கள்'' என்றுள் அவள் சிரித்துக் கொண்டு. ''கௌசல்யா எங்கே?'' என்றும் கேட்டாள்.

''அவ பெங்களூர் போயிருக்கா ஏதோ ஒரு கல்யாணத்துக்கு.''

அதனுல் தான் இவர் இன்று இங்கு வந்திருக்கிறுர் என்று புரிந்தது. புரிந்ததும் மனசில் லேசாக ஒரு நமைச்சல் ஏற்பட்டது. மனத்தளவில் இவருக்கு வயசே ஆகவில்லையோ என்று தோன்றிற்று.

''நீங்க உள்ளே நுழையும் போது நினைச்சேன். ராஜு, நீங்க ரொம்ப மாறிப் போயிட்டேள். உடம்பு தளர்ந்து போச்சு...''

அவர் முகம் லேசாக இருண்டு போன மாதிரி இருந்தது. அவளுக்குத் தான் அப்படிப் பேசியிருக்க வேண்டாமோ என்று தோன்றிற்று.

''எல்லோரும் உன்னை மாதிரி இருக்க முடியுமா மைதிலி? இருபது வருஷங்களுக்கு முன்னுடி எப்படியிருந்தியோ இன்னும் அப்படியே இருக்கே?''

''நான் அதை ஒரு சுமையா நினைக்கிறேன்னு உங்களுக்குத் தெரியும் ராஜு!''

''அது எல்லோருக்கும் தெரிஞ்சிருந்தா நம்ம வாழ்க்கை இன்னும் எவ்வளவோ நன்னுயிருந்திருக்கும். நிம்மதியாயிருந்திருக்கும். இல்லையா மைதிலி?''

மறக்க நினைத்த பழைய நினைவுகள் திடீரென்று வெள்ளமாகக் கிளம்பி முகத்தில் அடித்தன. அவள் திக்கு முக்காடிப் போனுள்.

(தொடரும்)

# நவீன அவதாரம்.

'கார்த்திகா ராஜ்குமார்'

**1984.**

வெப்பமான 'மே' மாதத்தின் முதல் வாரம்.

'இப்பொழுது எனக்குத் தேவை இன்றைய இளைய சமுதாயத்திலிருந்து ஒருவன்...

ஜீன்ஸில், எல். எஸ். டி.யில் சோஷலிஸத்தைத் தேடிக்கொண்டிருக்கும் போலித்தனங்களில் அமிழ்ந்து நாசமாகிக் கொண்டிருக்கும் இளைஞர்களில் ஒருவன்... இப்படிப்பட்ட ஒருவன் தேவை...

என்னுடைய சோதனைகளுக்கு. பத்து வருட ஆராய்ச்சியின் விளைவுகளைச் சோதிக்கும் சோதனைகளுக்கு...'

இப்படி நினைத்துக் கொண்டு புரொபஸர், டாக்டர் ராமமூர்த்தி வெகுகாலமாய், குறிப்பாகக் கடந்த ஆறு மாத காலமாக ஸீரியஸாகத் தேடிக் கொண்டிருந்தார்.

அர்த்தமில்லாத 'த்ரில்'களையும், கிறுக்குத்தனங்களையும் நேசிக்கும் இன்றைய பெரும்பாலான இள்சுகளில், யுவதிகளை ஒதுக்கிவிட்டு 'யுவன்' ஒருவனைத் தேடிக் கொண்டிருந்தார்.

இப்படித் தேடிக் கொண்டிருந்த பொழுது ஒருநாள் 'அவன்', அவருக்குக் கிடைத்தான். அவன் திடமாக, தலையில், உடம்பில், மீசையில், பெண்மைத்தனம் கலந்த ஆண்மைத்தனத்தில் இருந்தான்...

கேட்டபொழுது அவன், 'த்ரில்'லுடன் எதுவும் புரியாமலேயே, அவருடைய சோதனைக்கு வருவதாக ஒப்புக் கொண்டான்.

அவரின் அந்தப் பெரிய ஒதுக்குப்புற பங்களாவுக்குள், அப்படியும், இப்படியுமாக நுழைந்தான். வெளியிலிருந்த உஷ்ணம் மறைந்து போய், ஏ. சி.யின் குளுமை அவனைத் தழுவிக் கொண்டது. அவரின் அந்தப் பெரிய, பிரத்தியேக அறைக்குள் நுழைந்ததும் 'வே' என்று விழித்தான்.

அங்கங்கே... குட்டி கம்ப்யூட்டர்கள் நின்று கொண்டிருக்க, சிவப்பு பச்சை விளக்குகள் கண்சிமிட்ட, ஒயர்கள், உருளைகள்... இன்னும் அவனுக்குப் புரியாத என்னென்னவோ அங்கு இருந்தன.

''வா இளைஞா... வா! தயக்கமில்லாமல் வா! வந்து இந்தச் சோபாவின் மேல் உன்னைத் தளர்த்திக் கொள்...''

அவருடைய கரகரப்பான குரல் அந்த அறையுள் சிதறியது. அவன் நிமிர்ந்தான். நிதானமாக அவரைப் பார்த்தான்.

''தாங்க் யு டாக்...'' என்றபடி சோபாவில் சாய்ந்தான். ''ஐ... ஆம் சுந்தர்ராஜ்! டாக்டர் உங்களைப் பத்தி விவரமாச் சொல்லுங்களா?''

''நித்யா...''

''என்னது?! நித்யாவா... யார் அது? உங்க டாட்டரா?''

''நோ... நீதான், நீயேதான்... நீ இனிமேல் சுந்தர்ராஜ் இல்லே. இனிமேல் உன் பெயர் நித்யா. சில வசதிகளுக்காக... நீ நித்யமாயிருப்பது போல... சில காரியங்களை..

''சரி...சரி... நித்யா... கேள்... என்னைப் பற்றி...

''நான் ஒரு சைன்டிஸ்ட், புரொபசர், என்பதைவிட இந்த மனித மேன்மைக்காகச் சிந்திக்கும் ஒரு சிந்தனையா



ளன்... இப்ப இருக்கிற இந்த 'புத்' பற்றி மனம் வெதும்பிப் போய், புலம்பறவங்கள்லே நானும் ஒருத்தன். நான் ஒரு சமுதாய சீர் திருத்தத்தை, புதுமையான வழியிலே, சைண்டிஃபிகா செய்யப் போறேன்...

''சைக்காலஜியை, சைண்டிஃபிகா யூஸ் பண்ணி... நீதான் என் ஆராய்ச்சிகளுக்கு, ஆராய்ச்சிப் பொருள். உன்னை வைச்சுத் தான் எல்லாத்தையும் சாதிக்கப்போறேன்.''

''சைக்காலஜிகல் ரிசர்ச் இன் சைண்டிபிக் வே!'' தோளைக் குலுக்கியபடி அவன் சிரித் தான்.

''என்னை வைச்சு என்ன பண்ணப் போறதா உத்தேசம், டாக்?''

''உனக்குப் புரியணும்னு அவசியமில்லே நித்யா. சொன்னாலும் விளங்கப் போறது மில்லே. என் சோதனைகளிலே அதற்குத் தேவையானது, உன் உடலைவிட மூளை தான். அதோட எண்ணங்கள், முதல்லே என்னோட டி. ஆர். சி. யிலே உன் எண்ணங்களை ஆராய்ந்து...''

''என்னது? டி. ஆர். சி.யா?''

''ஆமாம்! தாட்ஸ் ரீவீலிங் கம்ப்யூட்டர்! உன்னோட எண்ணங்களைக் கண்டுபிடிக்கிற கம்ப்யூட்டர் என்னோட ஐந்து வருட ஆராய்ச்சி யின் விளைவு... இந்த அற்புதம்!...''

''உங்களைப் பார்த்தவுடனே நான் ஒரு மாதிரி 'கேஸ்'னு நினைச்சது சரியாப் போச்சு... இங்க... பாருங்க... டாக்...''

''நித்யா.. சரி வா இந்த நாற்காலியில் ஏறி... புதைந்து கொள்..உன் வசதிப் படி... சோதனையின் ஆரம்ப கட்டத்திற்குப் போகலா மில்லையா...''

''எஸ் டாக்டர்...'' என்றபடி சலூனில் ஏறி அமர்வது போல, உயரமான அந்த நாற் காலியில் மூன்று படிகளேறி அதில் உட் கார்ந்தான்.

''ஹௌ டு யூ... ஃபீல் ... நித்யா?''

''பெண்டாஸ்டிக் டாக்டர், என்னென் னவோ செய்யலாம் போல இருக்கு... மை குட்னஸ் எவ்வளவு மெதுவா... டன்லப் ஃபோம் கூட... இப்படி இருக்காதே...'' என்றான் அவன் உற்சாகத்துடன்.

''ஏய் ஸ்டாப் இட்! அந்தக் கனெக்டிவ் கவரேஜை எடுத்து உன் தலையில் கவிழ்த்துக் கொள். பின்புறம் ஒயர்கள் இருக்கும், ஜாக் கிரதை முறுக்கிக் கொள்ளக் கூடாது...''

அப்படியே செய்தான் நித்யா.



''ஹலோ டாக்... என்னைப் பார்த்தா இப்ப அஸ்ட்ரநாட் மாதிரி தெரியுது இல்லே.. இப்படியே என்னை ஒரு ஸ்நெப் எடுங்களேன்... அது சரி, நீங்க ஏன் கோர்ஸ்ஸு சோதனைகளுக்கு எடுக்கறதில்லேன்னு சொன்னீங்க...?'' உற்சாகமாகப் பேசினான் நித்யா.

அவனுடைய உற்சாகங்களை அலட்சியம் செய்து விட்டு, அருகிலிருந்த கண்ட்ரோலிங் ஸ்விட்ச் போர்டை நெருங்கினார் ராமமூர்த்தி. ஆசையாய் இரண்டு மூன்று பட்டன்களை ஸ்பரிசித்தவுடன், ஏகப்பட்ட பச்சை, சிவப்பு விளக்குகள் கண் சிமிட்டின.

நான்கடி உயரத்துக்குப் பத்தடி அகலத்துக்கு வியாபித்திருந்த தம் டி.ஆர்.சி.யைக் காதலுடன் பார்த்தார். 'ஆர் யு ரெடி மை லவ்?' என்றபடி மேலோட்டமாய் இணைப்புக்களைச் சரி பார்த்து விட்டு பட்டன்களை அழுத்திய பொழுது, சிறிய திரைகளில், டி. ஆர். சி. யின் நான்கு பகுதிகளில் 'ரெடி' — 'நார்மல்' என்று எலெக்ட்ரானிக் சிவப்புப் புள்ளிகள் மின்னின. திருப்தியுடன் தலையை ஆட்டிக் கொண்டு, அவனிடம் திரும்பினார் ராமமூர்த்தி.. அவன் அனைத்தையும் வினோதமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''நித்யா... பி... நார்மல்! ஓ. கே? நீ இப்ப எதைப் பார்க்கணும்னு நினைக்கிறே... ஐ மீன் எதைப் பார்க்க விரும்பறே?... ம்ம்?...''

''தாங்க்ஸ் டாக்! ப்ளூ... பிலிம் பார்க்கலாமா?''

''யு... யு... வில்லி... பாய்! கெட்டது... என் தப்பு... சரி... இதைப் பார்!''

விளக்குகள் அணைய, பரவிய மெல்லியதான இருளில், அவன் எதிரே 'டி. வி. சைஸ் திரையில், 16 எம்.எம். படமொன்று ஓட ஆரம்பித்தது... (கலரில்)

'அடர்ந்த காடுகளினூடே நழுவிச் சென்ற அந்த ஒத்தையடிப் பாதையில் ஓர் உருவம் வேகமாய்ச் செல்ல... காமிராவின் ஜூம் ஷாட்டில்... மெல்ல... அந்த உருவம்...? அவளாகத் தெரிந்தது.

வேகமாய், பரபரப்புடன் சென்று கொண்டிருந்த அவளின் மார்புகளின் பரிணாமங்கள், அவள் அணிந்த ஆடையின் ஊடேயே பளிச்சிட்டது... அவசரமாக ஓடும் அவள் கால்களின் குளோஸ்அப்...

விளக்குகள் பளிச்சிட்டன.

''டாக்... டாக்...'' அவசரமாய்க் கத்தினான் நித்யா... ''நல்ல இடத்திலே 'கட்' பண்ணிட்டீங்களே... ப்ளீஸ் டாக்... இன்னும் கொஞ்சம்...''

''நோ... நோ... நித்யா...'' என்று கரகரத்த குரலில் நிர்த்தாட்சண்யமாய்ச் சொன்னார் ராமமூர்த்தி.

விளக்குகள் மீண்டும் ஒளிர்ந்தன. டி. ஆர். சியில் விளக்குக் கண் சிமிட்டல்கள் அமர்க்களமாக இருக்க, கண்ணாடி வழியே தெரிந்த ஸ்பூல் டைப் டேப் போல ஒன்று அவன் வார்த்தைகளைப் பிடித்துக் கொள்ளத் தயாராகியது. ஒரு கணம் யோசித்து விட்டுச் சொன்னான் நித்யா.

''பாவம் டாக்டர்... அவ பரிதாபமா, அனாதையா... படங்களிலே ரேப் பண்ணற வில்லன் துரத்தற பொண்ணு மாதிரி...''

அவன் மனத்தைத் துருவுவதுபோல் ஆழமாகப் பார்த்தார் அவர்.

''என்ன... டாக்... இப்படி... வில்லன் பார்வை பார்க்கறீங்க...?''

'நித்யா... உன்னோட உண்மையான எண்ணங்கள் இந்த டி. ஆர். சி. யிலே ரிகார்ட் ஆகியிருக்கும். உன்னோட உண்மைகள் வெளியாகப் போகுது...' என்றார் அவர் தம் மனத்துக்குள்.

''நத்திங்... நத்திங் நித்யா... அனதர் ஒன்! ஓ. கே...?''

''வித் ப்ளஷர் டாக்ட்! 'பட்' கொஞ்சம் பசுமை பசுமையா இருக்கட்டுமே...''

''பசுமையா...? ம்ம்...'' என்றபடி சென்றவர், சில பட்டன்களை அழுத்தி, எதையோ ஒன்றை மாற்றி விட்டு வந்தார்.

மீண்டுமாகப் பரவிய இருளில், மெல்லியதாய்த் தெரிந்த அந்தத் திரை மீண்டும், ஒளிர ஆரம்பித்தது. இனிய இசையுடன்...

க்வீக்... க்வீக்... க்வீக்... கூ... கூ... கூ

லல்லலாக்கள்... தானே னேக்கள்...

ஹொய்... ஹொய்...

(காமிரா மறுபடியும் கிரேனில் ஏறி ஜூம் செய்து) சளசளத்த ஆற்றங்கரையைக் காட்டியது... அங்கும் இங்குமாகத் தங்களுக்கு இடையே மாயச் சுவரை எழுப்பிக் கொண்டு சர்வ சகஜமாய், சுதந்திரமாய்க் குளிக்கும் ஆண்களும், பெண்களும்... களையான முகங்கள்... களங்கமற்ற... களுக்.. களுக், ஹா... ஹா... சிரிப்புக்கள்...

கிளிக். திரை தன் வழக்கமான நிலைக்கு மாற, விளக்குகள் மறுபடியுமாய் ஒளிர்ந்தன.

நித்யாவை நிமிர்ந்து பார்த்தார் ராமமூர்த்தி.

''என்ன இருந்தாலும்... அந்தக் காலப் படங்களே... டாப்தான்!''

---

கடவுள் தரிசனத்துக்கென்று புறப்பட்டு வருகின்றவர்களுக்குத் திருச்சி மாதிரி ஒரு சிறந்த ஊர் இருக்க முடியாது. திருச்சி மலை மீது உச்சிப் பிள்ளையார், சிவன் கோவில். மூன்று கிலோ மீட்டர் வடக்கே திருவானைக்காவல் கோயில். ஸ்ரீரங்கம் அரங்க நாதன் கோயில். நாமக்கல் சாலையில் கலியுகத் திருப்பதி என்று அழைக்கப்படும் குணசீலம் பெருமாள் கோயில், திருச்சியிலிருந்து 21 கி. மீ.ரில் அமைந்துள்ளது. வடக்கே பதினைந்தாவது கி. மீ. இல் சமயபுரம் மாரியம்மன் கோயில். 5 கி. மீ. தூரத்தில் குமார வயலூர் முருகன் கோயில். 20 கி. மீ. தூரத்தில் கரிகாலன் கட்டி வைத்திருக்கும் கல்லணை. தெற்கே மயில்கள் ஆடும் விராலிமலை 25 கி. மீ. தூரத்தில். இவையெல்லாவற்றையும் ஒரே மூச்சில் பார்த்து விடலாம்.

—சக்தி நாயனார்.



நித்யாவைச் சில கணம் பார்வையாலேயே அளந்து விட்டு, நிதானமாய், தம் டி. ஆர். சியை நெருங்கினார் டாக்டர் ராமமூர்த்தி.

டாஷ் போர்டில்... சிவப்பும் பச்சையுமாக டாலடித்தன. பெருமிதத்துடன் அதைப் பார்த்துவிட்டு, நித்யாவைத் திரும்பிப் பார்த்தார்.. ஒரு கணம்.

அவரின் ஸ்பரிசத்துக்காகக் காத்திருந்த டி. ஆர். சி.யை இயக்கினார் அவர்.

'டிரிப்... டிரிப்... டிரிப்... டிரிப்...''

ஒரு நீண்ட மெல்லிய பேப்பர் ரிப்பன் வெளியில் வழிய, அதை வேகமாய் எடுத்துப் பார்த்தார்.

நித்யா... ஏதோ வேடிக்கை பார்ப்பது போல ,,பாதி சுவாரசியமும், பாதி அசுவாரசியமாகவும் நின்றான்.

ராமமூர்த்தி, அந்தக் காகித ரிப்பனை, அதில் கம்ப்யூட்டர் சங்கேத மொழியில் வந்ததைப் படித்தார். படித்தவரின் முகம், சிவக்க ஆரம்பித்தது...

''யூ... யூ... ப்ளடி... ஹிப்போகிரைட்!... ஏய் நித்யா... ஹூம்... உன்னைச் சொல்லிக் குற்றமில்லை. .பொய்யான போலித் தனங்களிலே பிறந்து வளர்ந்து, போலித்தனமா வாழ்ந்துட்டு இருக்கிறவன்களிலே ஒருத்தன் தானே... நீ...''

அவர் ஆவேசமாய் உறுமிய பொழுது, நித்யா திகைத்துப் போய் விழித்தான்;

''டாக்... நீங்க... என்ன சொல்றீங்க?.. புரியலையே?...''

''ஏய் நித்யா... முதல் ஸ்கிரீனிங்குக்கு நீ உன் மனசிலே நினைச்ச நினைப்பு... என்ன தெரியுமா?...

'சே! அட்டகாசமான பிகர். செக்ஸ் குயின்கள் எல்லாம் பிச்சை வாங்குற மாதிரி... மை குட்னஸ் இந்தக் கிழவனுக்கு எப்படி இந்த மாதிரி ரோல்ஸ் கிடைச்சிருக்கும்?... இவளை விடக் கூடாது...'

நித்யா அதிதமாய் முகம் வெளிறிப் போனான்.

''செகண்ட் ஸ்கிரீனிங்கிலே நீ நினைச்சது என்ன தெரியுமா?... இந்தக் கிராமத்து ஜனங்களுக்கே... டெம்ப்டிங் ஃபிகர்... தூத் தெறி...அந்தக் குளிக்கிறவள்லே ஒருத்தியைப் பார்த்தா... 'சௌம்யா' மாதிரி! சே!...

''நித்யா... இப்பத்து இளைஞர்களாகிய உங்க மனசுகளிலே ஏன் எப்பவும் இந்த 'செக்ஸ்' ஆக்கிரமிச்சிக்கிட்டு... இருக்கு... பெண்களின் எழுச்சிகளிலேயே மயங்கி..., லயிச்சு... வெறிபிடிச்சு, அனுபவிச்சு நாசமாகிப் போய்... ஓ மை குட்னஸ்!

''அதைத் தவிர ஏன் உங்களுக்கு வேற எதுவுமே தெரியறதில்லே?''

நித்யா இன்னுமாக வெளுத்துப் போய், வார்த்தைகளை உதிர்க்க முயன்று தோற்றுப் போனான்.

''நித்யா... ஏன் திகைச்சுப் போயிட்டே? உன்னோட முகம் வெளுத்துப் போனதே என் ஆர். டி. சி. கண்டு பிடிச்சதெல்லாம் உண்மைன்னு... சொல்லிடுச்சு...! என்ன நித்யா...?''



பொதுவாக விசில் அடித்தும் பெண்களைக் கூப்பிட்டால் கோபப்படத்தான் செய்வார்கள். ஆனால் அதே பெண்கள் விசில் சப்தத்தைக் கேட்டு விழுந்தடித்துக்கொண்டு நெருங்கிவரும் தருணமும் உண்டு.

அது எப்போது? விடை அடுத்த பக்கம் பார்க்க.

நாக்கை ஈரப்படுத்திக் கொண்டு, வறண்ட குரலில் சொன்னான் நித்யா:

''ரியலி... யூ... ஆர்... கிரேட்! யுவர் டி. ஆர். சி. இஸ் கிரேட்... சரி... உங்க... சோதனை முடிஞ்சுதே... நான் போறேன்...'' என்றபடி... இறங்க முயன்றான் நித்யா. டாக்டர் ராமமூர்த்தி, சட்டென்று அவரின் வயதுக்கொவ்வாத வேகத்துடன், சரேலென அவன் முன் பாய்ந்து நின்று... வழி மறித்துக் கொண்டார்.

''நோ.. நித்யா... யூ... டோன்ட் கோ... என் சோதனைகளோட முதல் கட்டம்தான் முடிஞ்சிருக்கு...இனி மேல்தான் நீ எனக்குக் கண்டிப்பா, அவசியமா... தேவை...''

நித்யா வியர்த்துப் போனான். அவர் பேசிக் கொண்டு போனார்.

''அக்கிரமங்களும், அநியாயங்களும் அதிகமான பொழுதெல்லாம்... அவதாரங்கள் அவதரிச்சு... அதை எதிர்த்தாங்க இல்லையா...

''அது மாதிரி போலித் தனங்களும், அக்கிரமங்களும் நிறைஞ்ச இன்றைய உலகத்தின் இளைய தலைமுறையை மாற்றப் போற ஒரு அவதாரமா... நீ மாறப் போறே... உன்னை மாத்தப் போறேன். என் அற்புதமான ட்ரீட்மெண்டிலே உன்னோட அவதாரத்தை வைச்சு... இந்த அனர்த்தங்களை, சமுதாயச் சாக்கடைகளைச் சுத்தம் பண்ணப் போறேன். நீ அவதாரமாக மாறப் போறே. நித்யா... பெருமைப் படு... இதற்காக... '' என்றார் கனவுப் பார்வையுடன்!

ஒரு கணம் திணறிப் போய் விழித்து விட்டு, வீரிட்டான் நித்யா!

''நோ... என்னை விட்டுடு... இதுக்கு நான் தயாரா இல்லே. எங்க வீட்டிலே தேடுவாங்க. ஏய். என்னை விட்டுடு...''

''ஒரு உயர்ந்த லட்சியத்துக்காக... உன்னை அவங்க... தியாகம் செய்யட்டும்... நீ அவதாரமா... மாறப் போறே...''

கம்பீரத்துடன், படு அலட்சியமாய்ச் சிரித்தார் ராமமூர்த்தி. நித்யா... பதறிப் போய் அலறினான்.

அவர் கையிலிருந்து நீண்ட அந்த ரப்பர்ப் பிரம்பு, திடீரென்று அவன் மேல் பளிரிட்டதில், அவன் வாழ்நாளிலேயே அனு

பவித்தறியாத வலியை அந்தக் கணத்தில் உணர்ந்து, நிலை குலைந்து போனான். அவன் கண் முன் பூச்சிகள் விர்விர்ரென்றன.

சாய்ந்தான்!

அவனைத் திருப்தியுடன் பார்த்தார் டாக்டர் ராமமூர்த்தி. உள்ளே சென்றவர் ஒரு நீண்ட ஸிரிஞ்சுடன் வந்தார். மிகுந்த ரசனையுடன் புன்னகைத்து விட்டு, அவனை நெருங்கி... அவன் சட்டையை... விலக்கி...

நித்யா கண் விழிக்க முயன்ற போது, லேசாகத் தெரிந்ததில், அந்த அறையில் மெல்லியதான இருள் பரவிக் கிடந்தது. உட்கார்ந்திருந்த இடம் மெத்மெத்தென்றிருந்தது... அவன் எழ... முயன்ற பொழுது... மிகப் பயங்கரமான அந்த நிலையை உணர்ந்தான். அவனால் ஒரு செ. மீ. கூட நகர முடியவில்லை.

டாக்டரின் கரகரப்பான குரல் திடமாய் ஒலிக்கத் தொடங்கி... மெல்ல அவனுள் பரவியது...

''நித்யா... நீ ஒரு அவதாரம்... நீ நித்யம். உன் செயல்கள் நித்யம்... உன் மனம்... அருமையாய்ப் பக்குவப்பட்டு... இந்தச் சமுதாய நோய்களை.. எதிர்த்து... போராடி...''

பல நிமிடங்கள் பறந்தன.

நித்யாவின் மனம் களைத்துப் போய், மயங்கிப் போய்...

''நித்யா...''

''எஸ் டாக்டர்...''

இளமையும், உற்சாகமும், கொப்பளித்த அந்தக் குரல், நித்யாவின் குரல், இப்பொழுது சன்னமாக நிச்சலனமாக, எந்திரமாக, திடமாய், கனமாய் ஒலித்தது.

''ஹௌ ஆர் யு நித்யா... மை சன்?''

''பைன்! தாங்க் யூ! டாக்டர்... ஐ ஆம்... கொய்ட் ஓ. கே. நௌ.''

''உன்னுடைய லட்சியம்...? நீ என்ன, செய்வதாக உத்தேசித்திருக்கிறாய்? இனி மேல்....''

''டாக்டர்... நான் ஒரு சீர்திருத்தவாதி... இந்த சமுதாய அழுக்குகளைக் களையப் போகும் ஒரு வீரன். என் உயிரைவிட என் லட்சியம்... பெரிது... புதியதோர் சமுதாயத்துக்கு அடித்தளமிடப் போகிறேன்...''

(இடையில் குறுக்கிடுவதற்கு வாசகர்களே! மன்னியுங்கள்!

இக்கதைக்கு இரண்டு முடிவுகளைத் தருகிறேன். (1)சைன்ஸ் ஃபிக்ஷனில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு (2) நம்பிக்கை இல்லாதவர்களுக்கு. தங்களுக்கு பிடித்தமானதைத் தேர்ந்தெடுங்களேன்!... நன்றி!)

---

விடை: குக்கர் அழைக்கும்போது!

எஸ். குமார கிருஷ்ணன்



நித்யா சொல்லச் சொல்ல... டாக்டர் ராமமூர்த்திக்கு... உடல் ஜில்லென்று குளிர்ந்து, தன் நீண்ட நாள் முயற்சிகளின் முழு வெற்றியைப் பரிபூரணமாய்க் கண்டதில் மகிழ்ச்சிப் பிரவாகமாகிப் போய், சந்தோஷத்தில்... குதித்து... நின்ற பொழுது... அவருக்கு... சட்டென்று உடல் வியர்க்க... ஆரம்பித்து... இனம் சொல்ல முடியாத வலிகளால் தாக்குண்ட பொழுது... டாக்டர் பலராம்... சொன்னது நினைவுக்கு வந்தது...

''ராமமூர்த்தி.. யு... ஷுட் நாட் எக்ஸைட் யுவர் செல்ப்... அடுத்த தடவை ஹார்ட் அட்டாக் வந்தா... கஷ்டம்...''

''தண்... தண்ணீர்.. த...'' என்று அலறியவர், நகர முடியாமல், அப்படியே விழுந்தார்.

அவருக்குக் கடைசியாக... நித்யா ஒரு தடவை கண்ணில் தெரிந்தான்.

● ● ●

1984. ஜூலை மாதத்தின் முதல் வாரம்.

ஸ்வாமி (நித்யானந்தம்) அவர்களின் சொற்பொழிவு முடிந்து திரும்பிக் கொண்டிருந்தனர். ஒருவர் தம் நண்பரிடம் சொன்னார்.

'ஏய் வேலு... இவரைப் பார்த்தாயா... என்ன மாதிரி 'யங்கா' இருக்கார்!... அவருடைய கருத்துக்களைப் பார்த்தியா... இதெல்லாம்... 'பார்ன்கிஃப்ட்' தெரியுமா.. என்ன துணிச்சலா.. எல்லாத்தையும்... சுட்டிக்காட்டுறார் பார்த்தியா... இந்த மாதிரி 'போல்ட்னஸ்' யாருக்கும் வராது... பாரேன் இன்னும் சில வருஷங்களிலே.. இவரோட 'மிஷன்'னு.. ஒன்னு ஆரம்பமானாலும்... ஆயிடும்... ரியலி... ஹி இஸ் எ ஜீனியஸ்!... எல்லோருமே (இடர்) ஸ்வாமி நித்யா(னந்த)வைப் பற்றிப் பேசிக் கொண்டே போனார்கள்.

2

நித்யா... சொல்லச் சொல்ல... டாக்டர் ராமமூர்த்தி, இதுவரை அவர் வாழ்க்கையில் அனுபவித்தறியாத சந்தோஷத்தை உணர்ந்தவராய் சந்தோஷத்தில், ஒரு 'குதி' குதித்தார்.. அவர் குதித்த வேகத்தில் அவர் கையிலிருந்த ரப்பர் பிரம்பு எகிறிப் போய், கண்ட்ரோல் போர்டில் மிக, வேகமாக... மோதியதில்... அடுத்த கணம்...

அடுத்த நாள் பத்திரிகைகளில் கொட்டை எழுத்தில் ஒரு செய்தி வெளியாகியிருந்தது.

'பிரபல விஞ்ஞானி டாக்டர் ராமமூர்த்தி தம் பரிசோதனை அறையில் ஏற்பட்ட தீ விபத்தின் காரணமாக மரணமடைந்தார். அவர் உடலுடன், இன்னொரு இளைஞரின் உடலும் கருகிக் கிடந்தது. அவர் யாரெனத் தெரியவில்லை. தீ விபத்துக்கான காரணத்தைப் போலீஸார் ஆராய்ந்து வருகின்றார்கள்.

வாழ்க்கைக் குறிப்பு: டாக்டர் ராமமூர்த்தி இன்னும் சில மாதங்களில் தம் மணி விழாவைக் கொண்டாடவிருந்தார்... அவர் கோவையிலுள்ள... பாப்பாநாயக்கன் பாளையத்தில்... 1924ம் ஆண்டு... ஆகஸ்டு 17ம் தேதி... பிறந்தவர்...



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி—

**வி**டுதலைபெற்ற இரு வாரங்களுக்குப் பிறகு ஸி. ஆர். 500 ரூபாய் நன்னடத்தை ஜாமீன் கட்டி அமைதி காக்குமாறு கோரப்பட்டார். சென்னையில் பார்வையாளர்கள் பெருங்கூட்டமாகக் கூடியிருந்த நீதிமன்றத்தில் அக்டோபர் 25ம் தேதி அவர் ஜாமீன் கட்ட மறுத்து ஓராண்டுச் சிறைத் தண்டனை பெற்றார்.

சிறைக்குத் திரும்ப நேர்ந்தது ஸி. ஆருக்கு வியப்புத் தரவில்லை. நாலு நாள் முன்னதாகத் தான் அவர் கூறியிருந்தார்: ''சிறையிலிருந்து நான் இப்போது வெளியே வந்திருக்கிறேன். ஆனால் நான் மறுபடியும் வெகு சீக்கிரமே திரும்பிப் போயாக வேண்டும்.'' தமிழ்நாடு காங்கிரஸின் தாற்காலிகத் தலைவராகச் சத்திய மூர்த்தியை அவர் நியமித்தார்.

பூனாவில் சிறைவாசம் அனுபவித்துக் கொண்டிருந்த மகாத்மா, ஸி. ஆரைக் கிண்டல் செய்து அதே நேரத்தில் தமது அன்பையும் வெளிப்படுத்துகிற மாதிரி ஒரு செய்தி அனுப்பினார். தமது சகா ஒருவரிடம், ''ராஜாஜிக்கு நீ கடிதம் எழுதி, அதில், நான் பிரபல தலைவர்களுக்குச் சாதாரணமாகக் கடிதம் எழுதுவதில்லை என்றும் எனவே அவருக்கும் நான் எழுத மாட்டேன் என்றும் ஆனால் அவரைத் தினமும் நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்றும் குறிப்பிடு'' என்றார்.

சென்னை, சீர்திருத்தச் சிறைக் கூடத்தில் முதலில் வைக்கப்பட்ட ஸி. ஆர்., பின்னர் அவருக்குப் பரிச்சயமான பெல்லாரி மத்திய சிறைச் சாலைக்கு மாற்றப் பட்டார். ஏற்கெனவே அங்கே ஒரு பூனை அவரைச் சிநேகம் பிடித்திருந்தது. ஸி. ஆர். திரும்பி வந்ததால் அது மிகவும் மகிழ்ச்சியுற்றது போல் தோன்றியது. அங்கிருந்து அவர் வேலூருக்கு மாற்றப்பட்டார். 1921—22ல் அவரது இல்லமாக விளங்கிய சிறைச்சாலை மீண்டும் அவரது வாசஸ்தலமாயிற்று.

இப்போது தென்னகத்தின் பிரதானமான சிறைக் கூடமாக விளங்கியது வேலூர். அங்கே ஸி. ஆருக்கு நல்ல தோழர்கள் இருந்தார்கள். தெலுங்கு, மலையாளம், தமிழ் ஜில்லாக்கள் பலவற்றிலிருந்து தலைவர்களும் தீவிர வாதிகளும் அங்கு வந்து சேர்ந்திருந்தார்கள். சக கைதி ஜி. ராமச்சந்திரன் டைரி எழுதியதால் வேலூர் சிறைக்குள் ஸி. ஆர். எப்படி இருந்தார் என்பதுபற்றிச் சில குறிப்புக்கள் நமக்குக் கிடைக்கின்றன;

''தீவிர வாதிகள் பலர் இருந்தனர். எனவே காரசாரமான விவாதங்கள் நடந்தன. சில சமயங்களில் வார்த்தை தடிக்கும். கைகலப்புக் கூட ஏற்பட்டு விடும். ஆனால் இந்த ஆர்ப்பாட்டமெல்லாம் ராஜாஜி அங்கு தோன்றிய உடனே அடங்கிவிடும்.

''பார்ப்பதற்கு அவர் பயந்தவர் போலவும் எச்சரிக்கையாக இருப்பவர் போலவும் தோன்றினார். எலும்பும் தோலுமாகக் காட்சி தந்தார். சதைப் பற்றே சிறிதும் இல்லை. ஆனால் யதார்த்தத்தில் அவர் அச்சமற்றவராகத் தான் திகழ்ந்தார். எந்தக் கூட்டத்தினிடையிலும் அவர் புகுந்த சில நிமிடங்களுக்குள் அனைவர் கவனத்தையும் ஈர்க்கும் மையப் புள்ளியாகி விடுவார். உரையாடல் கலையில் அனைவரையும் மிஞ்சியவராக விளங்கினார்.

''காப்பி பிரியராக இருக்கிறீர்களே. இதை மகாத்மா ஆமோதிப்பாரா?'' என்று கேட்ட போது, ஸி. ஆர். இவ்வாறு பதில் கூறினார்:

''எனது செயல்களில் பாபு ஆமோதிக்காத ஒரே விஷயமாக இது இருக்குமாயின், எனது ஒரே பாபம் இதுவாயின் நான் சொர்க்கத்தைத்தான் சென்றடைவேன் என்பது நிச்சயம்.''

துருவி ஆராயும் கண்கள், திரையைக் கிழித்து தெரிந்து உண்மையை உணர்த்தும் ஞானம், கூர்மையான வாதத் திறன் இவற்றையெல்லாம் அவர் இயல்பாகப் பெற்றிருந்த போதிலும் இவற்றால் பாதிக்கப்படாமல் வேலூரில் நண்பர்கள் அவரைச் சுற்றிச் சூழ்ந்தார்கள். அவரிடம் அன்பு செலுத்தி அவரை முழுமையாக நம்பினார்கள். சிறை வாசம் என்ற கட்டாய ஓய்வின் ஒரு பகுதியை ஸி. ஆர். ஹிந்தி பயிலப் பயன்படுத்தினார். ஒரியா காங்கிரஸ்காரர் எஸ். பி. ரத் இப்பயிற்சிக்குச் சுறுசுறுப்பாக வழிகாட்டி உதவினார்.

சிறைவாசத்தால் ஸி. ஆரின் ஆன்மாவில் துரு ஏறவில்லை. மது விலக்கு சங்கத்தில் தமது சகாவாக விளங்கிய ஆண்டர்ஸனுக்கு கிறிஸ்துமஸ் தினத்தன்று இதய பூர்வமான தமது விருப்பத்தைத் தெரிவித்து அவர் வாழ்த்து அனுப்பினார்:

''சுதந்திர இந்தியாவும் கிறிஸ்துவ ஐரோப்பாவும் எல்லா விதமான கசப்பு உணர்வுகளும் நீங்கப் பெற்று நட்பினால் பிணைப்புண்டு விளங்க வேண்டும்.''

அரசின் ஆலோசகர்களிடையே, முன்னிலும் கண்டிப்புக் கறாரான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று கருதியவர்கள் இருந்தார்கள். ஆனால் இர்வின் யோசித்துக் கொண்டிருந்தார். அச்சிந்தனைகள் நேர்மாறான முடிவுகளுக்கு அவரை அழைத்துச் சென்றன. கல்கத்தாவில் டிசம்பர் மாதம் அவர் சொன்னார்:

''தேசியம் என்பதன் அர்த்தத்தை நாம் குறைத்து மதிப்பிட்டோமானால் மிகப் பெரிய

---

படம்: சத்தியமூர்த்தியுடன் ராஜாஜி

தவற்றைச் செய்வதராவோம் என்று நான் நம்புகிறேன். தேசிய ஜுர வேகத்தை நிரந்தரமாகக் கட்டுப்படுத்த அரசின் தீவிர நடவடிக்கை மருந்தாகாது: அதற்கு ஒரு மருந்து இன்னும் கண்டு பிடிக்கப்படவில்லை, இனியும் கண்டுபிடிக்க முடியாது.''

ஜனவரி 17ம்தேதி, ''காந்தியை இயக்கும் ஆன்ம சக்தியை என்னுல் புரிந்து கொள்ள முடிகிறது'' என்று இர்வின் கூறிய போது டில்லியில் அதிகாரிகள் புருவங்களை உயர்த்தினர்.

இதை விடவும் பெரிய அளவில், அதிகாரிகள் எதிர்பாராத விஷயம் நடக்கவிருந்தது. தேச பக்தர்களையும் அது வியப்பில் ஆழ்த்தியது. பிரதம மந்திரி மக்டொனுல்டுடன் கலந்தாலோசித்த பிறகு, வைஸ்ராய், ''காந்தியும் காரியக் கமிட்டி அங்கத்தினர்களும் விடுவிக்கப்படுவார்கள்'' என ஜனவரி 25ம் தேதி அறிவித்தார். மறுநாள் குறிப்பிட்ட சில சிறைக்கதவுகள் திறக்கப்பட்டன.




காந்தியும் வி. ஆர் உள்பட அவரது சகாக்களும் விடுவிக்கப்பட்டனர்.

## 35. சுயராஜ்யத்துக்கு மற்ருெரு வழி

தலைவர்கள் ஜனவரி 26ம் தேதி விடுவிக்கப்பட்டனர். லாகூரில் சுதந்திரப் பிரமாணம் மேற்கொண்டு சரியாக ஓராண்டு ஆகியிருந்தது.

''நிபந்தனை ஏதுமற்ற விடுதலை'' என்று வர்ணித்த வைஸ்ராய், ''நாம் எத்தகைய நல்லெண்ணத்திஞல் உந்தப் பட்டு இப்படி நடந்து கொண்டுள்ளோமோ அதே நல்லெண்ணத்துடன் நமது தீர்மானத்திஞல் பயனடைந்துள்ளவர்களும் நடந்து கொள்வார்கள் என நம்புகிறேன்'' என்ருர்.

மகாத்மா பதிலளித்தார்: ''பகைமை உணர்வு என்னைக் கட்டிப் போட்டு வைத்திருக்கவில்லை. தர்க்க வாதங்கள் என்னை ஒரு தலைப் பட்ச மாகச் சிந்திக்கச் செய்யவுமில்லை.''

என்றும் போல அடிமை வாழ்வே நீடித்தது இந்திய மக்களுக்கு. வி. ஆர். கூறினர்: ''தங்கள் நிலையை எண்ணி அழுவதா, அல்லது அந்நியரால் ஆளப்படுகிற அந்த அபத்த நிலையை எண்ணிச் சிரிப்பதா என்று இந்திய மக்களுக்குப் புரியவில்லை. ஆனல் அழுவதோ சிரிப்பதோ பயன் தரப்போவதில்லை. செயல் திட்டம் ஒன்றைக் கண்டுபிடித்தாக வேண்டும்.''

யோசித்து அதனை உருவாக்கத் தலைவர்கள் அலகாபாத்தில் கூடினர். ஒருவரை யொருவர் பத்து மாதங்களுக்குப் பிறகு பார்த்துக் கொண்ட போதிலும் அவர்களது இந்தச் சந்திப்பு வருத்தம் தோய்ந்ததாகவே இருந்தது. மோதிலால் நேரு இறக்கும் தருவாயில் இருந்தார்.

அவரது தியாகம் பிறருக்கு எடுத்துக் காட்டாக விளங்கிய ஒன்று. சுகபோக வாழ்க்கைக்கு பழகியவராஞலும் போராட்டத்தின் எல்லையில்லாக் கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் சந்தோஷத்துடன் ஏற்ருர். அவரை விட இருபது வயது சிறியவரான வி. ஆர். பல சந்தர்ப்பங்களில் அவருடன் மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்தார். இரண்டு வழக்கறிஞர்களின் வாழ்க்கை முறைகளும் மாறுபட்டிருப்பதாகத் தோன்றியது. மோதிலால் செல்வந்தராகவே வாழ்ந்தார். வி. ஆர். சேலத்தில் வெற்றிகரமாகத் தொழில் நடத்தி வந்த போதிலும் எளிய வாழ்க்கையையே மேற்கொண்டிருந்தார். கம்பளிச் சால்வையை நீண்ட அங்கி போல போர்த்திக் கொண்டிருந்த விதத்தில் மோதிலால் ரோமானிய சக்கரவர்த்தி போல தோற்றமளிப்பதாகச் சிலர் எண்ணினர். வி. ஆரின் தோற்றம் ஸோக்ரதர் பாணியில் இருந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: வெ. ராஜேந்திரன்

# மலரான சருகு



## சு. சமுத்திரம்

அந்தக் கிழட்டு மரத்தில் துவங்கி, தனித்தனியாக இப்போது வேர்விட்டுப் படர்ந்திருக்கும் மூன்று கிளைக் குடும்பங்களுக்கும், வாழ்க்கையுடன் நடத்தும் போராட்டமே பெரிதாக இருந்ததால், சாவோடு போட்டி நடத்தும் இந்தப் பரமசிவக் கிழவரின் பிரச்னை பெரிதாகத் தெரிந்தாலும் தெரிந்திருக்கலாம். மூன்று மகன்களாலும், பயனில்லாமல் போன தந்தையை அனுதாபத்துடன்தான் பார்க்க முடிந்தது. அறியாப் பருவத்திலே அம்மாவுக்கு அம்மாவாய்த் தோளில் எடுத்து வளர்த்த பெற்றவனை, அவர்கள் சோகமாகத்தான் பார்த்தார்கள். ஆனால், தோளில் வளராமல் தோளுக்கு மேலேயே வளர்ந்த மருமகள்காரிகள் நிஷ்காமமாகப் படுத்திருக்கும் அந்தக் கிழவனுக்கு நிஷ்காமமாகச் சேவை செய்ய முடியவில்லை.

அன்று பெரிய மருமகள் முறை.

குற்றாலக் குளிர்ப் பனியாகப் படரும் அந்தக் கிராமத்தில் ஓலை பிய்ந்து போன ஓலைப் பாயில் பிய்ந்து போனதுபோல் தோன்றும் கால் கைகளோடு, சீவப்பட்ட தேங்காய் போல் தலையெல்லாம் முடியிழந்து, கரிபிடித்த விளக்குபோல் கண்ணீர் ஒளி குறைந்து, பட்டை உரித்த வேர் போல் உடம்பெல்லாம் செதில் செதிலாகக் கிடந்த அந்தக் கிழவரை, அனுதாபத்தோடுதான் பார்க்க முயன்றாள், முடியவில்லை.

வேட்டியெல்லாம் நனைந்திருந்தது. வாயின் வழியாக வெளிப்பட்ட சளி, மார்பில் பட்டு, தயிர்மாதிரி உறைந்திருந்தது. கண்களிலோ அருவருப்பூட்டும் அழுக்கு. கொட்டாவி விடுவதற்காக அவர் வாயைத் திறக்கும்போதெல்லாம் ஒரே நாற்றம். அருகில் நெருங்கினால் வாந்தியெடுக்க வைக்கும் வாடை.

பெரிய மருமகளுக்கு எரிச்சலாக வந்தது.

பெரிய மருமகள் மாமனாரைத் தூக்கி, சுவரில் சாய்த்துக் கொண்டிருந்தபோது, கடைசி மருமகள் மாமனாரை இரக்கத்தோடு பார்த்தாளோ இல்லையோ, தன்னை இரக்கத்தோடு கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். இன்னும் இரண்டு நாளில் அவள் முறை வரும். இந்தக் கிழத்தை அவள் இதே மாதிரித் தூக்கி, பணிவிடை செய்ய வேண்டும். கடைசி மருமகளுக்கு நினைத்துப் பார்க்கவே அருவருப்பாக இருந்தது.

மூத்தவள் செயல்பட்டும், இளையவள் சிந்தனையை இழுத்துப் பிடித்துக் கொண்டும் இருந்தபோது, வீட்டுக்குள்ளிருந்து கைப்பிள்ளையோடு ''நடுமவள்' வந்தாள். இன்னும் மூன்று நாட்களில், 'பிறந்தவீட்டுக்குப் போக' வேண்டும் என்று கடந்த மூன்று மாத காலத்தில் ஒவ்வொரு வாரமும் அவளால் நினைக்கத்தான் முடிந்ததே தவிர, நினைத்ததைச் செய்ய முடியவில்லை. பெரியவனை எப்படியாவது சொக்க வைத்து, தன் முறையையும், அவள் தலையில் கட்டிவிட்டு, பிறந்தகம் செல்ல வேண்டும் என்று அவளுக்கு ஆசை: நடுவளின் எதிர்பார்ப்பு ஏமாற்றமாகிக் கொண்டு வந்தது.

பரமசிவக் கிழவர் மல்லாந்து படுத்திருக்கிறார்.

வாயில் ஈக்கள் மொய்த்தன. கண்களில் கொசுக்கள் அரித்தன.

கூப்பிடும் தொலைவில் இருந்த இளைய மருமகளைக் கூப்பிட்டு, 'கொஞ்சம் விசிறிய வச்சி வீசும்மா, கொசுத் தொல்லை தாங்க முடியலை' என்று கிழவர் சொல்ல நினைத்தார். ஆனால் நெஞ்சில் கிளம்பிய வார்த்தைகள் தொண்டைக்குள்ளேயே நின்று விட்டன. உதடுகளை அசைக்கக் கூட முடியவில்லை. மூன்றுமாத காலமாக மல்லாந்து படுத்ததால் முதுகு புண்ணாகியிருந்தது. சிவப்பு சிவப்பாகத் தோலுரிந்து புண்ணாகிப் போன முதுகு, தரையில் உராய்ந்து நரக வேதனையைக் கொடுத்தது. மாறிப் படுக்க முடியாது; பிராணன் போகிற வலி. சொல்ல முடியவில்லை.

''ஈஸ்வரா ஈஸ்வரா... நீ உண்மையிலேயே இருக்கியா?''

பரமசிவக் கிழவர், தமக்கே கேட்காத அளவிற்கு, தமக்குள்ளே முனகிக் கொண்டார். உடலைச் செயலற்றதாக்கிய அந்த ஈஸ்வரன், அவர் உணர்வுகளையும் செயலற்றதாக்காமல் போய் விட்டான். இந்த உயிர் எப்போ போகப் போகிறதோ, எப்போ விடுதலையோ... எப்போ...

பரமசிவத்தால் உடம்பை நெளிக்க முடியவில்லை. உள்ளத்தைத்தான் நெடித்து, ஒடித்து நெளிக்க முடிந்தது. தான் சுரணை கெட்டுப் போய் விட்டதாக நினைத்து, பெரிய மருமகளிடம் இரண்டாமவள் முணுமுணுத்த வார்த்தைகளின் அர்த்தம் புரியாமல், அதே சமயம் அதன் நோக்கம் புரிந்தவர் போல் ஈச்வரனுக்குக் கேட்கட்டும் என்பது

போல் அழுதார். மருமகளின் ஒரு சில வார்த்தைகளை, எண்ணிப் பார்த்து அழுதார்.

'எண்ணெய்... தண்ணி... இளநீர்...!'

மருமகள்காரி சொன்ன இந்த மூன்று வார்த்தைகள் மட்டுந்தான், அவருக்குக் கேட்டது. மற்றது புரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் புரிந்தது. அவர் உயிர் வாழ்வது பிறருக்குச் சுமையாக இருக்கிறது. அவரின் போகாத உயிர், பிறரின் பிராணனை வாங்கிக் கொண்டிருக்கிறது.

பரமசிவக் கிழவர், ஈஸ்வரனை நொந்துக் கொண்டார்.

கிராமத்தவ எல்லோரும், காளியம்மன் சுடலைமாடன் என்று ஆடு கோழி வெட்டி, ஆண்டவ தரிசனம் செய்து கொண்டிருந்த போது, இவர் மட்டும் சிறிது விலகியிருப்பவர். வைக்கோல் வண்டியை அடித்துக் கொண்டு தென்காசிக்குப் போகும்போது அங்கே உள்ள ஈஸ்வரன் கோயிலுக்குப் போவார். நேரம் இருந்தால் கால்நடையாக குற்றாலம் போய்க் குளித்து விட்டு, குற்றால நாதரைத் தரிசித்து விட்டு வருவார். எப்போதாவது மனம் சலனப்படும் போது லிங்கத்தைத் தம் முன்னால் மானசீகமாகக் கொண்டு வந்து நிறுத்துவார். இது நாளடைவில் ஒரு பழக்கமாகி, காலையில் எழுந்தவுடனேயே கண் முன்னால் தோன்றும் அல்லது அவரே தோற்றுவித்துக் கொண்ட லிங்கத்தை வணங்கி விட்டு, இதர காரியங்களைக் கவனிக்கப் போய் விடுவார். இவ்வளவுதான், அவரது பக்திப் பகுதி. இதற்கு மேல் போகவில்லை.

இந்தப் பக்தி, அவரை அந்த ஊரிலேயே ஒரு தனிப் பிறவியாக இருக்க வைத்தது. பிள்ளைகளை, அதன் போக்கிலேயே, விட்டாலும், பிள்ளைகள் இவர் நோக்கிலேயே வளர்ந்தன. பகவத் கீதை இலக்கணப்படி வாழலாம் என்பதற்கு இந்தக் கிழவரை உதாரணமாகக் கூறலாம்.

நேரம் ஆகிக் கொண்டிருந்தது.

பரமசிவக் கிழவர் தவியாய்த் தவித்தார். மரணம் விரைவில் வந்து விடும் என்று நம்பியது எவ்வளவு தப்பாய்ப் போயிற்று. ஈஸ்வரா... நான் உன்னைத் தவிர வேறு யாரையும் நினைக்கவில்லை. மரம் வெட்டும்போதும், ஏர் உழும்போதும், நல்லதுக்கும்கெட்டதுக்கும் எல்லாவற்றுக்கும் உன்னையே நினைத்தேன். நீ இருக்கையில் கவலையில்லை என்று நினைத்தேன்.

ஈஸ்வரா... ஈஸ்வரா...

''இதுக்கு முடிவு கட்டு. உன்னை நம்பியது வீண் போகாது என்பது உண்மையானால், இன்றே என் வேதனைக்கு முடிவு வேண்டும். முடிவில்லாப் பரம்பொருளே! உன் முடிவைச் சொல்லு! சொல்லு.''

கொசுக்களின் அரிச்சல் தாங்க முடியாமல் நினைத்ததை நிறுத்தி உபாதையின் உந்தலில் கண்களை மூடிய கிழவரின் மனக்கண்முன் குற்றாலநாதர் கோவில் தெரிந்தது.

திடீரென்று அந்த லிங்கம், ஆவுடையாருடன், தனியாக, அவர் கண்முன் நின்றது. அதோ... குருக்கள் வருகிறார். லிங்கத்திற்கு முதலில் எண்ணெய் தேய்க்கிறார். பிறகு குடங்குடமாக நீர் வார்க்கிறார். அதையடுத்துத் தேங்காய்களை வெட்டி, இளநீர் அபிஷேகம் நடத்துகிறார். அதற்குப் பிறகு மேளச் சத்தம். ஒரு சந்தன வாடை. லிங்கம் முழுவதும் பூக்கள். வாடாத பூக்கள்.



பிரமை கலைந்த பரசிவக் கிழவர், சிறிது திகைத்தார். சிறிது அஞ்சினார். இறுதியில் அவர் பார்த்த பரம்பொருளின் விசுவ ரூபத்தை நினைத்துப் பார்க்கப் பார்க்க, நடு மருமகள், ''எண்ணெய்... தேங்காய்... இள நீர்'' என்று விட்டு விட்டுச் சொன்ன வார்த்தைகளும் அவை விடுவித்த அர்த்தமும் அவருக்கு நன்றாகப் புரிந்தது. புரியப் புரியச் சிரித்தார். சிரிக்கச் சிரிக்க உடம்பை அசைத்தார். உடம்பு அசைய அசைய, கைகால்கள் சொன்னபடி கேட்டன. பிள்ளைகள் வரட்டும் என்று கிழவர் சலனமின்றிக காத்திருக்கிறார். ஒருகாலத்தில், சாகாமல் சாகும் கிழங்களுக்கு, கிராமத்தினர் கட்டும் முடிவை, தானே தமக்குக் கொண்டு வரப் போகும் திருப்தியில் அசையாது கிடக்கிறார்.

பிள்ளைகள் வருகிறார்கள்.

கிழவரின் பார்வையில் தோன்றிய பாவத்தைப் பார்த்ததும் பிள்ளைகள் பக்கத்தில் வந்தார்கள். சிறிது நேரத்தில் அவரது மனைவிமார்களும் வந்தார்கள். கிழவர் பெரிய மகனின் கையைப் பிடித்துக் கொண்டார். அசைவு பெறுவதைக் கண்டு முதலில் மகிழ்ந்த மகன்கள் அது அணையப் போகிறது என்பதைப் புரிந்து கொண்டவர்கள் போல் 'அய்யா... அய்யா...' என்று அழுதார்கள். இந்தச் சத்தங்கேட்டு அக்கம் பக்கத்திலுள்ளோர் வந்து கூடினார்கள்.



கிழவர், பிள்ளைகளைப் பார்த்தார். பேரன் பேத்திகளைப் பார்த்தார். மருமகள்களைப் பார்த்தார். பிறகு எல்லாமே தம் பிள்ளைகள் என்பது போல் அங்கே கூடியிருந்த அனைவரையும் பார்த்தார்.

பரமசிவக் கிழவர், தம் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டார். பிறகு தம் பிள்ளைகளைப் பார்த்து ''என்னெய்... தேவி... என்னெய் தேவி... தண்ணி... வேணும்... தண்ணி... வேணும்...'' என்றார்.

பேச முடிந்தது. அவரால் கணீரென்று பேச முடிந்தது.

''குளிச்சி... நாளாச்சிடா. என்னெய் தேச்சி குளிக்கணுண்டா..தேங்காய் தண்ணி.. குடிக்கணுண்டா... சீக்கிரண்டா... சீக்கிரண்டா... குற்றாலத்துல பூஜையை ஆரம்பிச்சிருப்பாங்கடா... நான் சொல்றதைக் கேளுங்கடா... நல்லா இருப்பீங்கடா...''

பிள்ளைகள் திகைத்தார்கள். பெரிய மகன் 'ஒமக்கென்ன பைத்தியமா' என்று சொன்ன போது, சின்ன மகன் அழுதார். இதற்குள், அங்கே வந்த 'பாரதம் பாடும்' தங்கச்சாமி 'ஏய், மாமாவோட கடைசி கால ஆசையை நிறைவேத்தணுண்டா. அவரு பூஜையைன்னு சொல்றாரு. காரணமாகத்தான் சொல்லியிருப்பாரு. கடைசி நேரத்துல அவரு, சந்தோஷமா சாகணுண்டா... அவரு, நல்ல வாக்கு கொடுக்கட்டும். சாபம் கொடுத்துடப் படாது'' என்றார்.

அங்கே கூடியிருந்த அனைவரும், தங்களுக்குக் கிழவர் நல்வாக்கு கொடுக்க வேண்டும் அல்லது குறைந்த பட்சம் சாபம் கொடுத்து விடக் கூடாது என்று கருதியவர்கள் போல், கிழவரின் மைந்தர்களை ஒரு பொருட்டாக நினைக்காமல், பரமசிவத்தைத் தூக்கி ''மூத்தத்திற்குக்'' கொண்டு போனார்கள். ஒரு மரக்கட்டையில் அவரை உட்கார வைத்து இரண்டு பேர் பிடித்துக் கொண்டிருக்க, இன்னொருவர் நடு மருமகளிடம் வலுக்கட்டாயமாக நல்லெண்ணெய்யை வாங்கி வந்து, கிழவரின் பாதாதி கேசம்வரை தேய்த்தார்.

கிழவர் சிரித்துக் கொண்டார். லிங்கத்தையும் குருக்கள் எண்ணெய் தேய்த்து விடுவது போல், அவருக்கு ஒரு காட்சி தோன்றியிருக்க வேண்டும். எண்ணெய்த் தேய்ப்பு முடிந்ததும் அவர் உடம்பு முழுவதும் குடம் குடமாக நீரை ஊற்றினார்கள். கிழவருக்குக் குளிரவில்லை. இல்லையென்றால் உடம்பை ஆட்டியிருப்பார். அவர் முகத்தை மட்டும் லேசாக ஆட்டிச் சிரித்தார். கொஞ்சம் பலமாகவே சிரித்தார்.

யாரோ ஒருவர், அவர் உடம்பைத் துடைத்து விட்டார். யாரோ ஒருவர் அவரைத் தூக்கிக் கொண்டு வந்து வீட்டில் வைக்கிறார். யாரோ ஒருவர் சாம்பிராணி புகை போட்டு அவர் உடம்பு முழுவதும் காட்டினார். யார் யாரோ என்னவெல்லாமோ செய்தார்கள்.

பரமசிவக் கிழவர் தெளிவாகவே பேசினார்.

''இளநீர் கொடுங்க. சீக்கிரம். குத்தாலத்துல, இவரு, இளநீரை, லிங்கத்துல ஊத்தறதுக்காகத் தேங்காயைத் தூக்குறார். சீக்கிரம்.. சீக்கிரண்டா...'

'பாரதம்' தங்கச்சாமி, ஓர் இளநீரை நன்றாகச் சீவி, கிழவரின் வாயில் ஊற்றினார். 'இன்னும் இன்னும்' என்றார் கிழவர். பிள்ளைகள் செயலற்றுப் பார்ப்பதைப் பார்த்த இன்னொருவர், இன்னொரு இளநீரை வெட்டினார். இறுதியில் இளநீர் வெட்டிக் கொடுத்தால் தங்களுக்கு நல்லது கிடைக்கும் என்று நினைத்து, பலர் போட்டி போட்டுக் கொண்டு கிழவருக்குத் தேங்காய்களை வெட்டிக் கொடுத்தார்கள்.

'போதும்' என்று சைகை காட்டினார் கிழவர். பிறகு தம்மைச் சுவரில் சாய்க்கும்படி சைகை செய்தார். இப்போது அவரால் பேச முடியவில்லை.

திடீரென்று அவர் கைகால்கள் இழுத்தன. வாய் கோணி, மீண்டும் பழைய நிலைக்கு வந்தது. கண்கள் உருண்டையாய்த் திரண்டு, மீண்டும் மூடிக் கொண்டன. மூச்சு வேகமாக வெளியே வந்து, அப்படியே நின்றது.

'சாமியார் மாதிரி வாழ்ந்து... சாமியாவே மாறிட்டார்' என்று தங்கச்சாமி சொன்ன போது, லிங்கச்சாமியாகத் தம்மைப் பாவித்துக் கொண்டது போல் தோன்றிய பரமசிவக் கிழவர் அப்படியே உட்கார்ந்திருக்கிறார். தலைமட்டும், விட்டால் போதும். தொங்கும்.

திருக்குற்றாலமலை அடிவாரத்தில், குறுமுனி அகஸ்தியரால் ஸ்தாபனம் செய்யப் பட்டதாகக் கருதப்படும் லிங்கத்திற்கு, இளநீர் அபிஷேகம் முடிந்து விட்டது. குருக்கள் இப்போது 'ஓம்' என்ற பிரணவத்தை உள்ளடக்கிய, வானப் பரப்பைப் பிரதிபலிக்கும் வடிவு கொண்ட அந்த லிங்கத்தில், மலர்களை வைத்துக் கொண்டிருந்தார்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஒருவர்: முன்னேயெல்லாம் சரியா படம் போடற நேரத்துக்குத்தானே தியேட்டருக்குள்ளே நுழைவீங்க. இப்ப சீக்கிரமாவே வந்துடறீங்களே?

மற்றவர்: இந்த விளம்பரங்கள், நியூஸ்ரீல் மாதிரி அறுவையெல்லாம் முடியட்டும்னு முன்னே நினைப்பேன். இப்ப வர்ற படங்களுக்கு இந்த விளம்பரமும், நியூஸ்-ம் எவ்வளவோ தேவலைன்னு ஆயிப்போச்சு. அதனாலே சீக்கிரமா வந்துடறேன்.

—சக்தி நாகனூர்





# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## யாத்ரீகர்களின் காணிக்கை பயன்படுத்தப்படுவது எப்படி?

யாத்ரீகர்கள் வாரி வழங்கும் ஏராளமான காணிக்கைத் தொகையை திருமலை திருப்பதி தேவஸ்தானம், இந்தியப் பண்பாட்டைப் பேணிப் பாதுகாக்கவும், அறிவைப் பெருக்கவும் மக்களின் துன்பம் துடைக்கவும் செலவிடுகிறது.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் மூலம் கிடைக்கும் ஏராளமான காணிக்கைத் தொகையில் ஒரு பெரும் பகுதி, ஒவ்வொரு நாளும் திருமலைக்கு விஜயம் செய்யும் ஆயிரக்கணக்கான யாத்ரீகர்களுக்கு நிறைய வசதிகளைச் செய்வதில் செலவிடப்படுகிறது.

பாக்கித் தொகை கீழ்க்காணும் வகையில் செலவிடப்படுகின்றன.

இந்து மதத்தை பாதுகாத்து வளர்க்க திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் நிர்வகிக்கப்படும் கோயில்களின் நித்தியக் கட்டளைகளையும் உற்சவங்களையும் தடையின்றி நடத்த உதவுவது.

வெங்கடேஸ்வரா சர்வகலாசாலை மற்றும் கல்வி நிறுவனங்களை நிர்வகிக்க உதவுவது.

எல்லா வயது மக்களுக்குமான கல்விச்சாலைகளை நடத்த மானியங்கள் வழங்குவது.

ஊனமுற்றோர், அனாதைகள், ஆகியோருக்கான மறுவாழ்வு அளிக்கும் கேந்திரங்கள், பிச்சைக்காரர் விடுதி ஆகியவை நடத்த உதவுவது.

சமூகநல சேவைகளாக இயற்கையின் இன்னல் வயப்படும் போது வெள்ளம், பஞ்சம் ஆகிய நிவாரணப் பணிகளுக்குத் தாராளமான நிதி வழங்குவது.

திருமலை கோயில் மற்றும் ஸ்ரீனிவாசா மிஷன் பற்றிய தகவல்களைப் பரப்புவதற்காக.

குறிப்பு: திருமலை திருப்பதி தேவஸ்தானத்துக்குச் செலுத்தப்படும் நன்கொடைகளுக்கு 1961ம் வருட வருமானவரிச் சட்டம் 80-G பிரிவுப்படி வரிவிலக்கு தரப்பட்டுள்ளது.

**P.V.R.K. பிரசாத் I.A.S.**
**எக்ஸிக்யூடிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

SUBRA & RAM

# சிவகுமார் 101

21–30

**நவக்கிரகம்:** இப்படத்தில் எனக்கும் லட்சுமிக்கும் ஒரு டூயட் காட்சி. நானும் லட்சுமியும் ஒருவரையொருவர் தொடாமல் எட்ட இருந்தே பாடுவதாக அமைந்திருந்தது. படம் வெளி வந்ததுதான் தாமதம், ரசிகர்களிடமிருந்து கண்டனக் கடிதங்கள் தான் அதிகம் வந்தன. எம். ஜி. ஆர். சிவாஜி படங்களைப் பாருங்கள். அவர்களைப் போலக் கதாநாயகியைக் கட்டிப் பிடித்து இறுக்கி அணைத்துக் காதல் செய்யக் கற்றுக் கொள்ளுங்கள். பயப்படாதீர்கள்! காதல் காட்சி டூயட் பாட்டு இவை எல்லாம் பொழுது போக்குக்காகச் சேர்க்கப் படுபவை. அவைகளைச் 'சப்' பென்று செய்து விடாதீர்கள். 'பாடல் காட்சியா? சிகரெட் பிடிக்க வெளியே செல்லலாம்' என்ற நினைப்பு ரசிகர்களுக்கு ஏற்படக் கூடாது! என்பது ரசிகர்கள் கருத்தாக இருந்தது. கதாபாத்திரத்தின் தன்மை, கதையின் அமைப்பு இவற்றைப் பற்றி அவர்களிடம் யார் வாதாட முடியும்?

**கண்காட்சி:** ஒரு காட்சியை எடுப்பதற்குச் சில நிமிடங்களுக்கு முன்னர்தான் அதில் சம்பந்தப்பட்டவர்கள் பேச வேண்டிய வசனத்தைக் கொடுப்பார்கள். அது எவ்வளவு நீண்ட வசனமாக இருந்தாலும் சரி அப்பொழுதே மனப்பாடம் செய்து முகபாவத்துடன் குரலில் ஏற்ற இரக்கத்தையும் இணைத்துச் சொல்லி விட வேண்டும். பாடல் காட்சி என்றால் இரண்டு இரண்டு வரிகளாகத்தான் அதற்கேற்ற நடிப்புடன் படமாக்குவார்கள். ஆனால் படப்பிடிப்புக்கு முன்பு அந்த இரு வரிகளை மட்டும் கேட்டுக் கொண்டு அதற்கு ஏற்றாற்போல் வாயசைப்போம். ஆனால் இப் படத்தின் பாடலை அந்த மாதிரி எளிதாகப் படம் பிடிக்க முடியவில்லை. இரு நாட்களுக்கு முன்பே பாடல் பதிவான டேப்பை வீட்டுக்கு எடுத்துச் சென்று நன்றாகக் கேட்டு மனப்பாடம் செய்தேன். இருந்தாலும் நடிக்கும் போது சிறிது கஷ்டமாகத் தானிருந்தது. அப்படி என்ன அந்தப் பாடலில் சிரமம்? இதோ படித்துப் பாருங்கள்:

அனங்கன் அங்கஜன் அன்பன்
வசந்தன் மன்மதன் என்றும்
வணங்கும் என்உயிர் மன்னவா
கதம்பம் செண்பகம் தங்கும்
கருங்கூந்தல் கனின் பொங்கும்
கனிந்தோங்கும்
கயற்கண்ணியே —
அன்பெழுந்தங்கா
கலந்தின்பம் தரும்
கன்னியே...

முழுப் பாடலுமே இப்படித் தானிருக்கும். இதை வேகமாகச் சொல்லுங்கள் பார்க்கலாம்!

**திருமகள்:** கல்யாண வயதில் வாலிபன். அவனுக்கு ஒரு முறைப் பெண். ஆனால் நிச்சயதார்த்தத்தன்றே வாலிபன் இறந்து விடுகிறான்.



"செட்டில் டைரக்ட் செய்யாத நேரத்தில் அமைதியாக ஏதாவது புத்தகத்தைப் படித்துக் கொண்டிருப்பார் திருலோகசந்தர்"

''ரசிகர்களுக்கென்ன, டூயட் காட்சிகளின்போது விலகியிருந்து நடித்தால் பிரயோஜனம் இல்லை என்பார்கள்; நெருங்கி நடித்தாலோ அவசியம்தானா என்று கேட்பார்கள்!''

முறைப் பெண் வீட்டிலே வேறு ஒருவன் தங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அந்த இரவில் அவர்கள் ஒருடலாகி விடுகின்றனர். நான் நடித்த இந்தக் காட்சியை விரிவாகப் படமாக்கியிருந்தார் இயக்குனர். படம் வெளி வந்தவுடன் முன்பு நவக்கிரகம் படத்தை விமர்சித்து எழுதிய ஒரு பட்டதாரி ரசிகர் மறுபடியும் எனக்குக் கடிதம் எழுதினார்: ''காதல் காட்சியில் நெருங்கி நடிக்கத்தான் சொன்னேனே தவிர கற்பழிக்குமளவுக்கு நெருங்கியிருக்க வேண்டாமே!'' இது எப்படி?

**சூதாட்டம்:** திரௌபதியைப் பணயமாக வைத்துப் பஞ்ச பாண்டவர்கள் சூதாடியது மகாபாரதக் கதை. இதையே ஒப்புக் கொள்ள முடியாது என்றால் சகோதரியைப் பணயமாக வைத்து அண்ணன் சூதாடுவது அதைவிடப் பெரும் தவறு தானே! அப்படி சூதாட அண்ணனுக்கு உரிமை ஏது? ஆனால் இந்தப் படக்கதையின் ஆணிவேரே அதுதான்! இதை எதிர்த்து ஒரு வார்த்தை பேசாமல் நடிக்க ஒப்புக் கொண்டேன் என்றால் அதற்கு மதுரை திருமாறனின் வசனத் திறமைதான் காரணம்.

''எங்கள் திருமணத்துக்கு முன் நான் நடித்த படம் எதையுமே பார்த்த தில்லை என்று பத்திரிகையாளரிடம் பேட்டி கொடுத்தாள் என் மனைவி!''



''சசிகுமாருக்கு ஏற்பட்டதுபோன்ற நிலை, ஆண்டவா, உலகில் எந்த ஜீவராசிக்கும் ஏற்பட வேண்டாம்!''

**தேரோட்டம்:** நானும், மறைந்த சசிகுமாரும் இப்படத்தில் பத்மினி அவர்களுக்குப் பிள்ளைகளாக நடித்தோம். அன்போடு பழகிய பட்டதாரி இளைஞர் சசிகுமார். அவர் வாழ்வு அவ்வளவு சீக்கிரம் முடிந்து விடும் என்று யார்தான் எதிர் பார்த்தார்கள்!



ராயப்பேட்டை மருத்துவ மனையில் ஏதோ சிறு நிப்புண்ணுடன் படுத்திருப்பார் என்று நினைத்துச் சென்ற நான் பெரும் அதிர்ச்சிக்குள்ளானேன். ஒரு நிமிடம் என் இருதயமே நின்று விட்டது. பிறந்த மேனியாகக் கறுத்து உருத் தெரியாமல் இருந்த அவர் உடல் வாழை இலையில் கிடத்தப்பட்டிருந்தது. அந்த நிலையிலும் அவர் என்னைப் பார்த்து, ''என்ன சிவா? இன்னிக்கு எந்தப் படம் ஷூட்டிங்? யார் டைரக்ட் பண்றார்?'' என்று கேட்ட பொழுது பேச முடியாமல் விக்கித்து நின்று விட்டேன். உலகிலுள்ள எந்த ஜீவ ராசிக்கும் சசிகுமாருக்கு ஏற்பட்டது போன்ற ஒரு நிலையை ஆண்டவன் தர வேண்டாம், அவ்வளவு பயங்கரம்!

**மூன்று தெய்வங்கள்:** ஹீரோ, ஹீரோயின் ஏவுட் டோர் பாட்டுக்காக ஊட்டி, கொடைக்கானல் என்று செல்லும்போது இரண்டாவது கதாநாயகன், நாயகியையும் அதில் இணைக்கலாம் என்று உடன் அழைத்துச் செல்வதுண்டு. அப்படி இல்லை என்றால், அவ்வளவு தூரம் போவது

# ஸ் அப் குளோஸ் அ

**திரு டி. எஸ். சேஷாத்ரி**



"**ஏ**ஸ்லோ ஸ்டாண்டர்ட்'' எண்ணெய்க் கம்பெனியில் பணியாற்றிய திரு சேஷாத்ரி, அதை விட்டு விலகி முழு நேரமும் நாடகத் தொழிலுக்கு என்று வந்து, இதுவரை ஆயிரத்துக்கும் மேற்பட்ட காட்சிகளை அரங்கேற்றியுள்ளார்.

''மெஸேஜ் இல்லாமல் வெறும் பொழுது போக்கு நாடகங்களை நான் போடவே மாட்டேன்'' என்று சொல்லும் இவர் தாம் பங்கு பெறும் நாடகங்கள் இல்லாத நாட்களில், நகரில் நடைபெறும் ஏதாவது ஒரு நாடக நிகழ்ச்சிக்குச் செல்கிறார். நாடகத்தை முழுதும் பார்த்துவிட்டு அப்பட்டமாய் விமர்சிப்பது உண்டு. இது கலையை வளர்க்க உதவும் என்பது இவர் கருத்து.

இவர் நடத்தும் நாடகங்களிலிருந்து கோபுரம், கஸ்தூரி, விஜயம் முதலிய பத்து திரைப்படமாகியுள்ளன.

தமிழகத்தில் பிறந்து தெலுங்கைப் பாடமொழியாய்க் கொண்டு படித்ததால் இவருக்குத் தமிழில் சரளமாய் எழுதத் தெரியாது. தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் ''கலைமாமணி'' விருது பெற்ற இவருக்கு மைலாப்பூர் அகாதமியின் அவார்டுகள் கடந்த பத்து ஆண்டுகளாய்த் தொடர்ந்து கிடைத்து வருகின்றன.

**திருமதி பார்வதி கிருஷ்ணன்**

"**நா**ன் அரசியலுக்கு வராமல் இருந்தால் ஆசிரியர் வேலைக்குத்தான் சென்றிருப்பேன்'' என்று கூறுகிறார் திருமதி பார்வதி கிருஷ்ணன். பெண் என்கிற தாழ்வு மனப்பான்மை ஏற்படாமல் சம உரிமை கொடுத்து வளர்த்தவர் தந்தை டாக்டர் சுப்பராயன்.

''உங்களுக்கு எத்தனை பையன்கள்... எத்தனை பெண்கள்?'' என்று யாராவது கேட்டால் ''நான்கு குழந்தைகள்... பையனோ பெண்ணோ எப்படி வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்'' என்பாராம் சுப்பராயன்.



40, 41 ஆம் ஆண்டுகளில் இரவு பகலாக நடைபெற்ற போர்த் தாக்குதல்களின்போது மீட்புப் பணியில் ஈடுபட்டவர் பார்வதி. குண்டு வீச்சில் காயமடைந்து கால் கைகளை இழந்து, அப்பாவி மக்கள் அவதியுற்றதைக் கண்டு மனம் வெதும்பியதானது இவருக்குப் போர் எதிர்ப்பு உணர்ச்சியை ஊட்டியது.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நாடாளு மன்ற உறுப்பினரான இவர் ஹாக்கி, டென்னிஸ், பாட்மிண்டன் விளையாட்டுக்களிலும் படகு செலுத்துவதிலும் திறமையானவர். சென்ற மே மாதம் நடைபெற்ற நாடாளு மன்ற உறுப்பினர்களுக்கான விளையாட்டுப் போட்டிகளில் பாட்மிண்டன் ஒற்றையர் ஆட்டத்தில் வெற்றி பெற்றுள்ளார். இசையில் ஆர்வமும் சமையல் கலையில் திறமையும் உள்ளவர்.

தான் போகிறோம், பூவோடு சேர்ந்து நாரும் மணம் பெறட்டும் என்பது போல் இரண்டாவது ஜோடிக்கும் ஒரு முழுப் பாட்டையும் கொடுத்துப் படமாக்கிக் கொண்டு வருவார்கள். இந்தப் பழக்கத்தை மாற்றி, எனக்காக, நான் டூயட் பாடுவதைப் படமாக்க வென்றே ஊட்டிக்குச் சென்றது இந்தப் படத்தில்தான். முதன் முதலாக ஊட்டிக்கு நான் அழைத்துச் செல்லப்பட்டதும் இந்தப் படத்துக்காகத்தான். எனது இருபத்தி ஆறுவது படத்தில்தான் எனக்கு இப்படிப்பட்ட கௌரவம் கிடைத்தது!

**அன்னை வேளாங்கண்ணி:** தமிழகத்தின் பெரும்பாலான நடிகர்கள் இதில் கௌரவ வேடமேற்று நடித்தார்கள். தம்பி கமலஹாசன் உதவி இயக்குனராகப் பணி புரிந்த படம். ஸ்ரீவித்யாவும், நானும் ஒரு உபகதையில் நடித்தோம். நான் நடித்த எந்தப் படத்தையும் என் மனைவி பார்த்ததேயில்லை என்று என் திருமணத்துக்கு முன்பு பத்திரிகையில் செய்தி வந்திருந்தது. இது எனக்கு ஏமாற்றத்தையும் ஆச்சரியத்தையும் அளித்தது. கொஞ்

# குளோஸ் அப் குளோ



## டாக்டர் பி. இ. சங்கரநாராயணன்

கோவிசேரி கே. வி. கிருஷ்ண மணியிடம் மூன்றாண்டு காலம் முறையாக மிருதங்கம் கற்றுக் கொண்ட திரு சங்கரநாராயணன் இப்போது, அடையாறிலுள்ள சென்ட்ரல் எலக்ட்ரானிக்ஸ் என்ஜினீரிங் இன்ஸ்டிடியூட்டில் விஞ்ஞானப் பொறுப்பு அதிகாரியாகப் பணியாற்றுகிறார்.

கர்நாடக இசையில் பெரும்பான்மையாக நடைமுறையிலுள்ள ஆதி, மிஸ்ரசாபு, கண்டசாபு, ரூபக தாளங்களுக்கான ''தாளம் ஜெனரேட்டர்'' என்னும் கருவி ஒன்றை வடிவமைத்துள்ளார் இவர். ரூ. 970 விலையுள்ள இந்தக் கருவி அண்மையில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்றில் ''யுனிக் எலக்ட்ரானிக்ஸ்'' நிறுவனத்துக்கு வியாபார ரீதியில் ஒப்படைக்கப்பட்டது.

0–3 செகண்ட் முதல் 3–00 செகண்ட்வரை தேவையான காலப் பிரமாணத்தில் ஒலியெழுப்பக் கூடிய இந்தக் கருவி, ஓரளவு காது கேளாதவர்களுக்கும் பயன் பெறும் வகையில், தாள ஒலிகளை, சிவப்பு, பச்சை, மஞ்சள் வெள்ளை ஆகிய நான்கு நிறங்களிலும் மாறி மாறி வெளிப்படுத்தும் வகையில் வடிவமைக்கப் பட்டுள்ளது! இவர், ஒலி வித்தியாசங்களைக் கொண்டு இயந்திரங்களின் பழுதுபட்ட பாகங்களைக்கண்டறியும் கருவி முதல், டப்பாக்களில் அடைபட்டு வரும் உணவுப் பண்டங்களைப் பாதுகாக்கப் போதுமான வெற்றிடம் உள்ளே இருக்கிறதா என்பதைக் கண்டறிவதற்கான கருவி வரை பல துறைகளிலும் பணியாற்றி வெற்றி பெற்றுள்ளார்.

## திரு. ப. நீலகண்டன்

''அகில பாரத சர்க்கா சங்கத்தில் தம்முடைய பதினாறுவது வயதில் சாதாரண விற்பனையாளராக வேலைக்குச் சேர்ந்து தேசப் பணி தொடங்கிய இவருக்கு அன்று சம்பளம் ஐந்து ரூபாய்தான். பின்னால், திரு நீலகண்டன் ஒரு பட டைரக்ஷனுக்கு ஐம்பதினாயிரம் ரூபாய்வரை வாங்கிவிட்டார். தமிழ்நாடு திரைப் படப் பயிற்சி நிலையத்தின் தலைவராக இந்த ஜூலை முதல் தேதி முதல் மூன்று ஆண்டுகளுக்கு இவரைத் தமிழ்நாடு அரசு நியமித்துள்ளது. ''திரைப் படத் துறைக்கு நான் செய்துள்ள சேவைக்கு முதல்வர் அளித்துள்ள பரிசு'' என்கிறார் நீலகண்டன். பத்திரிகையாளராய்த் தொழிலில் ஈடுபட்ட இவர், திருச்சி வானொலி நிலையத்துக்காக ஏராளமான நாடகங்களை எழுதியுள்ளார். கம்ப ராமாயணத்தை நன்கு பயின்று அது தொடர்பான இரண்டு நூல்களை எழுதி வெளியிட்டிருக்கிறார். தவிர அறிஞர்களின் இலக்கியச் சொற்பொழிவுகளைத் தொகுத்து'' இன்பப் பொழில்' என்று ஒரு நூல் பிரசுரித்துள்ளார். ''நூறு நூல்களைப் படிப்பதைவிட பத்து சொற்பொழிவுகளைக் கேட்பது சிறந்தது. பத்து சொற்பொழிவுகளின் செறிவை மூன்று நாடகங்களில் பெறலாம். மூன்று நாடகங்களை விட ஒரு நல்ல திரைப்படம் அதிக சக்தி வாய்ந்தது'' என்று அழுத்தமாகச் சொல்கிறார்.

– யெஸ்பால்



# கிரிக்கெட் கற்கலாம்! 42

கதை: கே. சந்திரசேகர்

படம்: ராஜ்ஸ்ரீ.. தயாரிப்பு: குன்றுமணி

## எல்.பி.டபிள்யூ

ஆட்டக்காரர்கள் பல வேளைகளில் இந்த 'முடிவு' (எல்.பி.டபிள்யூ) சம்பந்தமாகப் பிரச்னைகளை எழுப்புவார்கள். பல பாட்ஸ்மன்கள் (இளம் பாட்ஸ்மனிலிருந்து டெஸ்ட் பாட்ஸ்மன் வரை) இந்தத் 'தீர்ப்பில்' என்றும் திருப்தியடைவதில்லை!









அம்பயரின் முடிவை என்றும் ஆட்டக்காரர்கள் ஏற்றுப் பணிவது அவசியம்.






















சம் வருத்தமும்தான். ஆனால் என் மனைவி நான் நடித்த ஒரு படத்தை எங்கள் திருமணத்துக்கு முன்பே பார்த்திருக்கிறாள் என்பதைச் சமீபத்தில் கண்டுபிடித்தேன். நானும் ஸ்ரீவித்யாவும் சம்பந்தப்பட்ட பாடல் காட்சி சமீபத்தில் டீவியில் காட்டப்பட்டது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த என் மனைவி, 'அடடா! இந்தப் படத்தை நான் காலேஜில் படிக்கும் போதே பார்த்திருக்கேனே! ஆனா இந்தச் சட்டித்தலை கிராப்பு நடிகர் நீங்கள் தானென்று எனக்குத் தெரியாது!'' என்றாள். சட்டித்தலை கிராப்போ பானைத்தலை கிராப்போ பத்திரிகையாளரிடம் தவறாகத் தகவல் கொடுத்திருக்கிறாள் என்பது தெரிய வந்ததில் எனக்கு ஒரு நிம்மதி!

**பாபு:** கூச்சலோ, குழப்பமோ, ஆர்ப்பாட்டமோ இல்லாமல் அமைதியாகப் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தால் அது ஏ. வி. திருலோகச்சந்தர் இயக்கும் படமாகத்தானிருக்கும். டைரக்ட் செய்வார். மற்ற சமயங்களில் புத்தகம் படித்துக் கொண்டிருப்பார். எனது முதல் படத்தை இயக்கியவர். இப்போது அவருடைய சொந்தப் படத்தில் அவர் டைரக்‌ஷனில் நடித்துக் கொண்டிருந்தேன். பாபுவின் உச்ச கட்டக்காட்சியைப் படமாக்கும் பொழுது பிளாஸ்டிக் மேக்கப் போட்டுக் கொண்டு சிவாஜி நடித்துக் கொண்டிருந்தார். ஒவ்வொரு முறையும் மேக்கப் போட்டுப் பின்னர் பிரித்து எடுக்கும் பொழுது கண்ணுக்குக் கீழ்ப்பகுதியில் தோலுரிந்து ரத்தம் கசியும். ஆனால் சிவாஜி கவலைப்பட வேண்டுமே! அலுத்துக் கொள்ள வேண்டுமே! மூச்! அடுத்த ஷூட்டிங்கின் போது அதே மேக் அப்புக்கு அமைதியாக அமர்வார்.

**அகத்தியர்:** சீர்காழி கோவிந்தராஜன் அகத்தியர் வேடமேற்க நான் தொல்காப்பியன் வேடமேற்றிருந்தேன். புராணப் படங்களை உருவாக்க நினைப்பதற்கு முன்பே அப்புராணங்களை நன்கு படித்து அவற்றின் தத்துவார்த்தங்களை முழுமையாக அறிந்து கொள்வார் ஏ. பி. என். நாடகக் கம்பெனியில் புராண வேடங்களை அதிகமாக ஏற்று நடித்த அனுபவமும் இணையும். அடிப்படைக் கல்விக்குக் கூட பள்ளிக்குச் செல்ல வாய்ப்பில்லாத அந்த மேதை எத்தனை இலக்கியங்கள் படைத்திருக்கிறார்!

**இதயவீணை:** சின்னப் பிள்ளை என்ற நிலையிலிருந்து மாறி நான் குணசித்திர வேடம் ஏற்கலாமென்று நிரூபித்தது இந்தப் படம். கதையில் முக்கியமான பாத்திரம் என்னுடையதுதான். என்னுடைய உண்மையான தோற்றம் அந்தப் பாத்திரத்துக்குச் சரியாகப் பொருந்தாது என்பதால் செயற்கை முடி வைத்து மூக்குக் கண்ணாடி அணியச் செய்து படமாக்கினார்கள். இந்தப் படத்துக்கு ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டது ஏன் தெரியுமா? மாண்புமிகு எம். ஜி. ஆர்., தி. மு. கவை விட்டு விலகிய போது வெளிவந்தது.

பேட்டி: சலன்

# 'ஓரம்போ!'-வாசகர் தீர்ப்பு

பல ஆண்டுகளுக்கு முன்பு 'மணப்பாறை மாடுகட்டி' என்ற பாடல் பட்டிதொட்டிகளில் எல்லாம் பிரபலமானது. நீண்ட காலத்திற்குப் பிறகு 'ஓரம்போ' பாடல் கிராமப் புறங்களில் எல்லாம் பிரபலமாகி வருகிறது. ஏன், ஒரு புரட்சியையே ஏற்படுத்தியுள்ளது! என்று கூடச் சொல்லலாம்.

திரைப்படப் பாடல்களில் யாப்பிலக்கணத்தையும், கவிநயத்தையும் பார்த்தால் நூற்றுக்குப் பத்துப் பாடல்கள், கூடத் தேறாது. 'ஓரம்போ!' பாடலை நாட்டுப் பாடல்கள் வரிசையில் எண்ணலாம். கங்கை அமரனின் பாடல்களிலும், இளைய ராஜாவின் இசையமைப்பிலும் கிராமிய மணம் கமழ்கிறது. கிராமப் புறங்களில் பிறந்து வளர்ந்தவர்கள் இதை நன்கு புரிந்து கொள்வார்கள். நம் நாட்டில் நூற்றுக்கு எழுபது பேர்கள் கிராமங்களில் வாழும்போது நாம் கிராமிய இசையை வெறுக்கலாமா?

சென்னை வானொலியினர் சற்றுப் பரந்த மனப்பான்மையுடன் இதை மீண்டும் பரிசீலிக்க வேண்டும்! முன்பு கிரீஷ்கர்னாட் தயாரித்த 'சம்ஸ்காரா' படத்தை சென்ஸார் தடை செய்தனர். ஆனால் பின்னர் அப்படத்துக்குப் பரிசு கிடைக்கவில்லையா?

பொது மக்களுக்கு மேலான சென்ஸார் யார் இருக்கிறார்கள் ?

சென்னை—35 ந. சுந்தரமூர்த்தி

'ஓரம்போ' பாட்டைப் பற்றி 'துறைவனின்' துணிச்சலான கருத்து வரவேற்கத் தக்கதாகும். பாட்டும் அதற்கு அமைந்த இசையும் அதைப் பாடிய இளையராஜாவின் குரலும் கூட அபத்தம் என்பது என் கருத்தாகும்.

குரோம்பேட்டை பாரிதாசன்

வானொலியில் அடிக்கடி ஒலிபரப்பாகும் ''ஹா• இஸ் இ பினாக் ஷீப்' பாடலில் பாடல் வசனம் படிப்பது போல்தானே இருக்கிறது? மெட்டா இருக்கிறது? அந்தக் காலத்தில் ரொம்பப் பிரபலமான ஞானஒளி ''தேவனே என்னைப் பாருங்கள்'' பாடலில் டி. எம். எஸ். தோடி ஆலாபனை பண்ணியிருப்பதாக துறைவன் நினைக்கிறாரோ? வசந்த மாளிகை 'யாருக்காக' பாடலில் என்ன காண முடியாத மெட்டை நிலையத்தார் கண்டு விட்டார்களோ? யாமறியேன் பராபரமே!

சென்னை—75 பம்மல் ஆர். ராம்சோ

வருஷம் 15 ரூபாய் தண்டம் அழுது, மட்டரகமான பேச்சுக்களையும் — ஒலிபரப்புகளையும் கேட்கிற அநியாயத் தண்டனை அனுபவித்து வருகிறோம். எவ்வளவு பேர் கேட்டாலும் ஒலிபரப்ப மாட்டோம் என்ற ஆணவப் பேச்சை இனிமேல் சொல்லாதீர்கள். ஏனென்றால் நாங்கள் எல்லோரும் ''சிலோன் வானொலியை'' மட்டுமே நம்பி வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

திருநெல்வேலி வெங்கடேஸ்வரன்

'ஆல் இந்தியா ரேடியோ' என்று பெயரிட்டுக் கொண்டிருக்கும் இவர்கள் 'சுயாட்சி' ( Autonomy ) பெற்றவுடன் ''நாலு பேர் ரேடியோ' என்று பெயர் வைத்துக் கொண்டு அதன் நிகழ்ச்சிகளை அவர்களே கேட்டு மகிழட்டும்!

மதுரை ஹரிஹரன்

'நேரம் வந்தாச்சு' 'மாணவன் நினைத்தால்', 'வண்டு வருகின்றது', 'ஒரு கிண்ணத்தை ஏந்துகிறேன்', 'காவிரி நகரினில்', 'கடவுளெனும் முதலாளி', 'நான் ஆணையிட்டால்' போன்ற பாடல்கள் அவர் தவிர்த்து விடுவதாகக் குறிப்பிட்டிருந்த விஷயங்களான, முறையே, காப்பியடித்தல், வன்முறையைத் தூண்டுதல், பாலுணர்ச்சியை சித்திரித்தல், குடிப்பதை ஊக்குவித்தல், மத உணர்ச்சியைப் புண்படுத்துதல், அரசியல் கட்சியைப் புகழ்தல், அரசியல் தலைவர்களை மறைமுகமாகத் தாக்குதல் ஆகியவற்றின் அப்பட்டமான உதாரணங்கள்.

இவற்றை மட்டும் எப்படி ஒலி பரப்புகிறார்கள்?

திருநெல்வேலி—11 ஷேக் சிந்தா மதார்

சமீப காலமாக சினிமாப் பாடல்களில், 90 சதவீதம் ஆபாசம்தான்! இரட்டை அர்த்தம்தான்! நால்வர் குழு இவற்றை ''எதற்காக ''ஆராய'' வேண்டும்? இளம் மனங்களைக் கெடுக்கின்ற இப்பாடல்கள் அனைத்தையுமே வானொலி நிலையத்தார் தடை செய்ய வேண்டும். இதில் ஏன் பாரபட்சம்? திரைப்படம் எடுப்பவர்களும் டைரக்டர்களும் கௌரவமான பாடல்களைக் கொண்ட படங்களாக எடுக்க வேண்டும். நம் சமூகத்தைக் கெடுக்காமல் இருக்க வேண்டும்.

சென்னை—44
இரா. சேஷாத்திரி



# அபூர்வப் புன்னகை

## கண்ணதாசன்

மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!
மேகலை ஓசையில் தாளம் பிறந்திட
மோக சுகம்எனும் போதை மிதந்திட
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

துல்லிய பட்டுத் துணியினில் வைரங்கள்
அள்ளி எடுத்து அடுக்கிய போலவும்
முல்லைக் கொடிஒன்றில் முற்றும் அரும்புகள்
பல்லென வந்தெனைப் பார்ப்பது போலவும்
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

கன்னத்தின் ஓரத்தில் சின்னக் குழிவிழ
மன்னன் மகுடங்கள் வாயித மூய்விட
கன்னல் பிழிந்ததில் சாறு கலந்திட
என்னைக் கவர்ந்திட ஏக்கம் பெருக்கிட
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

செம்பொன் மயிலென சின்ன நடையிட்டு
கும்ப தனங்களில் குத்து விளக்கிட்டு
அம்பு விழிகளில் ஆனந்த நஞ்சிட்டு
செம்பவ ளப்பெட்டி சித்திரப் பூங்குட்டி
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

மூடிய ஆடைகள் மோகனம் பாடிட
ஆடிய கிண்கிணி தண்டை குலுங்கிட
கோடியி லேயொரு கோவிற் சிலையென
கூடி இருக்கையில் கொஞ்சிக் கிடக்கையில்
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

கட்டி அணைத்தொரு முத்தம் களிக்கையில்
கட்டழ கிள்ளந்தன் சித்தம் லயிக்கையில்
ஒட்டிய கன்னங்கள் ஊர்க்கதை சொல்கையில்
தட்டிக் கொடுத்தொரு தாலாட்டுப் பாடியே
மெல்லச் சிரித்தாள் — எனை
வெல்லச் சிரித்தாள்!

ஆஸ்திரேலியா சிட்னியில் ஓர் ஓவியக் கூடம் உள்ளது. யாரும் எந்த ஓவியத்தையும் திருடிக் கொண்டு போய் விட முடியாதபடி பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் உள்ளன. ஒரு நாள் திடீரென்று அலாரம் அடிக்க, இரும்புக் கதவுகள் சடாரென்று மூடிக் கொண்டன. ஆயுதம் தரித்த காவலாளிகள் பறந்தோடி வந்தார்கள்.

இத்தனை பாதுகாவல்களையும் முட்டாளாக்கியது ஒரு பட்டாம் பூச்சி! ஒரு ஓவியத்தின் பிரேம் மீது உட்கார, அந்தச் சட்டத்துடன் இணைக்கப்பட்டிருந்த மின் கம்பி மூலம் எச்சரிக்கை எழுந்து இவ்வளவு களேபரம்.

— டிட்பிட்ஸ்
— ஆரெம்

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran






# எல்லாவற்றிலும் ஆர்வம்!
# எப்பொழுதும் துடிதுடிப்பு!

உங்களுடைய குழந்தை, வளரும் பருவத்தில் ஒவ்வொரு விநாடியும் அதிகமான சக்தியை செலவழிக்கின்றான். அவனுக்கு வேண்டிய சக்தியை அளிக்கிறது—மால்ட், சாக்லெட், பால் நிறைந்த, சுவைமிகுந்த பூஸ்ட். ஏனெனில், பூஸ்ட் முழு ஆடைப் பால் கோதுமை, பார்லி மால்ட், மற்றும் கோகோவிலிருந்து தயாரிக்கப்படுகிறது.

உங்களுடைய குழந்தை ஒவ்வொரு நாளும், நாள் முழுவதும் படிப்பில் ஆர்வத்துடனும், விளையாட்டில் துடிதுடிப்புடனும் இருப்பதற்கு, சக்தி தரும் எரிபொருளை அவனுக்கு அளியுங்கள்.




## துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்.

# பூஸ்ட்

மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

8-5621 TAM 10

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு







